அன்பு மலர் ௧௧



# புதுமையும் பழமையும்

(நவீன நாடகம்)

Old & New
(a Social Drama)



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது

அன்பளிப்பு
By இராமலிங்கம்



அன்பு நிலையம்
இராமச்சந்திரபுரம்,
சிங்கப்பூர்
1938

 [விலை அணா 8

# பதிப்புரை

இறைவன் திருவருளால் எமது நிலயத்தின் பதினோராவது அன்பு மலரைத் தமிழன்னையின் பொன்னடியில் வைத்து வணங்குகின்றோம். இப் புதிய சீர்திருத்த நாடகம், காலத்திற் குதவாத பழந்தீமைகளைப் போக்கி, நமது சமுதாயம் புத்தொளி பெற்று, உலகம் மதிக்கப் பொலியும் வழியைப் படம் பிடித்துக் காட்டுகிறது. இதில் நவரசங்களும் ததும்புகின்றன; பயனுள்ள நகைச்சுவை நிரம்பியுள்ளது. இதில் வரும் ஒவ்வொரு நாடக பாத்திரமும் ஒரு சீர்திருத்த வாழ்வின் தத்துவ வடிவாகும். குப்பண்ணுச்சாரி வைதீக பக்தியின் வடிவமே. சேஷிப்பாட்டி, காலத்தின் முன்னேற்றத்தைக் கருதாது, பழங்கொள்கைப் பிடிவாதத்திலேயே வாழும் மாமூல் கிழவி. அவள் பேச்சும் நடையும், நம்மை நகை குலுங்கச்செய்து, பழமையின் பல்லவிக்குமேல் புது வாழ்வின் இன்பப் பாட்டை இன்னும் உரத்திப் பாடச்செய்கிறது. குணக்கொழுந்து, கலியின் கொடுமையும், போலி யொழுக்கங்களும், வஞ்சனையும், காலத்தால் நமது நாட்டிற் படர்ந்த தீமைகளுமே உருவான ஆஷாடபூதி. அவனுடைய பாசாங்குகள் பெருநகை விளைவித்து, நவநாகரிகத்தில் உள்ள மாயங்களைப் போக்க உணர்ச்சி தருகின்றன. தாசி கோமதி, விலை வாழ்வின் கொடும் பாவத்தையும், அதனின்று பெண்மையைக்

காத்துச் சமுதாயத்தைத் தூய்மை செய்யும் வகையையும், தனது பேச்சாலும் செயலாலும் நன்கு விளக்குகிருள். பெண் விடுதலைக்காக அரிய பணி புரிந்து, கைம்பெண் கண்ணீரைத் துடைத்து, கல்வியொளி பரப்பும் பங்கஜத்தின் வாழ்க்கை, கணவனை யிழந்த பெண்டிர் எந்த விதமாகத் தமக்கும், சமுதாயத்திற்கும் நன்மையான அருட்பணி புரிந்து வாழலாம் என்பதைக் காட்டுகிறது. பிரமசாரி எவ்வாறு பொது நலப்பணி புரிந்து, தூய வாழ்வு நடத்தலாம் என்பதை இந்திப் பிரசாரம் செய்யும் கோபாலன் வாழ்வு காட்டுகிறது. பங்கஜமும் கோபாலனும் இயல்பாகக் காதலித்து எல்லாரும் ஒப்பும்படியாகத் திருமணம் புரியும் காட்சி, மறுமணம் நிகழவேண்டிய மாதிரியைக் காட்டுகிறது. கல்விப் பருவத்திலேயே சமுதாயத்திற்கு நன்மையான கொள்கைகளும், வாழ்வும், பொதுநலவுணர்வும் பயிலும் வகையைச் சீமான் வாழ்க்கை நன்கு விளக்குகிறது. கமலம், சுதந்திர சக்தி ; இனி வரும் புதிய பெண்ணரசியின் திருவடிவம் ; காதல் மணத்தின் தத்துவ விளக்கம். நல்ல கல்வியும், புதுமை யுணர்வும், நாட்டன்பும், சீர்திருத்த வாழ்வும், இளமைக்கேற்ற காதலும், சுதந்திரமும் பொது நலப்பணியும் விளங்கும் கமலம், நமது சமுதாய முன்னேற்றத்திற்கேற்றபடி எவ்விதமாகப் பெண்டிர் வாழவேண்டுமென்பதை நன்கு விளக்குகிருள். அவள் அன்னை, செல்லம், நன்ருய்ப் படித்த நாகரிகப் பெண்மணி யாதலால், மகளின் சுதந்திர வாழ்வை ஆமோதிக்கிருள். காலத்திற்கேற்றபடித் தாய்மார்கள் எப்படி நடக்கவேண்டும், கணவனை எப்படித் திருத்தவேண்டும், மக்களை எப்படி வளர்க்கவேண்டும், வீட்டை எப்படி நிர்வகிக்க வேண்டும், இத்துடன் நாட்டிற்கும் எவ்வாறு இயன்றதைச் செய்யவேண்டும் என்

பதைச் செல்லத்தின் வாழ்க்கை விளக்குகிறது. இவர்கள் சீர்திருத்த வாழ்விற்கெல்லாம் காரணமாகிய கதாநாயகன், வேணு, சமுதாய முன்னேற்றத்தின் தத்துவ வடிவாகவே காண்கிருன். சாதி, மத வேறுபாடுகள் ஒழிந்து, சமரஸ சன்மார்க்கத்தில் ஒன்றுபட்டு, அறிவும், தொழிலும், ஆன்மநேயமும், உரிமையும் கொண்டு, ஆண்மையும் பெண்மையும் சுதந்திரமாகத் தருமஸாதன வாழ்வு வாழும் வகையை வேணு தனது உதாரணத்தால் விளக்குகிருன். குழந்தைக் கலியாணம், கைம்பெண் துயரம், தீண்டாமை, மூடப் பிடிவாதங்களைப் போக்கி, மாந்தர் பகுத்தறிவுடன் காலத்திற்கேற்ற சீர்திருத்தங்களைப் போற்றி, ஒற்றுமையாக வாழச்செய்யவே முன்னேற்றச் சங்கத்தை வேணு நடத்தி உலகிற்கு வழி காட்டுகிருன். போலீஸார் முதலிய மற்றப் பாத்திரர்கள் கால நிலையைக் காட்டுகின்றனர்.

இவ்வாறு மூன்று காலத்தையும் படம் பிடித்துக் காட்டி, நாடு முன்னேறப் புதிய உணர்ச்சி தரும் இந்த அரிய சமூக சீர்திருத்த நாடகம், படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்றவாறு எழுதப் பெற்றுள்ளது. இதை நாடக மேடையிலும் பேசும் படத்திலும் நடத்திக் காட்டினுல் நாட்டிற்குப் பெரும்பயனுகும். அரங்குலகிற்கே இந்நாடகம் ஒரு புதிய வழி காட்டுகிறது. புராணக் கதைகளில் நாம் பெறும் அத்யாத்ம உணர்வும், நன்னெறியுணர்வும் இதில் நாம் அடைகிருேம். அத்துடன் நமது நாடு உலகின் முன் தலை நிமிர்ந்து நிற்க வேண்டிய சமூக ஆசார சீர்திருத்தங்களும், ஆண் பெண் சுதந்திர வாழ்வும், இதன் காட்சிப் படலங்களில் விளங்கும். இந் நாடகம், நகைச்சுவை ததும்ப இனிய எளிய நடையில் அமைந்திருக்கிறது.

இந்நூலை எழுதிய சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்கள், முத்தமிழ்ப் புலவர்; நாடகக் கலையை நன்கு உணர்ந்தவர்; இளமையில் பல நாடகங்கள் நடித்தவர்; ஆங்கிலம், பிரெஞ்சு, வங்கம், இந்திக் கலைகளை நன்கறிந்தவர். இவர் எழுதிய நாடகக் கலை விளக்கம், அப்பர், விரத வைராக்கியம், வசந்தகுமாரி, பாசுபதாஸ்திரம், புத்த ஞாயிறு, இராணி மங்கம்மாள், சீமைச் சரக்கு, சகுந்தலை, பிரதாப சிம்மன், சுதந்திரா, ஏழை முருகன் முதலிய 32 நாடகங்களும், மனித வாழ்வை உயர்த்தி, நாட்டிற்கு அரிய நலஞ் செய்யும் சிறந்த இலக்கிய மணிகளாகும். காலமும், பொருளும், அன்பர் துணையும் கை கூடும்போதெல்லாம் இந்த நாடகங்களை வெளியிட்டு, அரங்கேற்றித் தமிழுலகில் புதிய கலைச்சுவை பரப்ப விரும்புகிறோம். திருவருள் எம்மை நடத்துக.

புதுமையும் பழமையும் என்ற இந்நாடகத்தின் அருமையறிந்து, ஆர்வமுடன் வெளியிட்டுதவிய செல்வத் திருவாளர் காரைக்குடி ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களுக்கு எமது அன்பார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம். இச் செந்தமிழ்ச் செல்வரைப் பற்றி அறியாத தமிழர் இருக்கமாட்டார்கள். இவர் தந்நலமற்ற பொதுநலத் தொண்டர்; சிறந்த தமிழன்பர்; தமிழர் கூட்டம் உலகின்முன் தலை நிமிர்ந்தோங்கவேண்டுமென்று அல்லும் பகலும் கருதும் தமிழ் வீரர்; பாரத தேவியிடம் எல்லையற்ற பற்றுதலுடையவர்; தாயின் விடுதலைக்கு உடல், பொருள், ஆவி மூன்றையும் ஈந்து, பணி புரியும் உத்தம தேச பக்தரில் ஒருவர்; நமது சமூகத்தில் படர்ந்த தீமைகளைப் போக்கிக் காலத்திற்கேற்ற சீர்திருத்தங்களைச் செய்

யத் தணியாத் தாகமுடைய தீவிரமான சீர்திருத்தவாதி. காரைக்குடியில் வெற்றியுற நடைபெற்ற மாகாண சாங்கிரஸ் மகா நாடுகளிலெல்லாம் இவர் பங்குகொண்டு, அரிய சேவை செய்திருக்கிறார். காங்கிரஸ் கொள்கையைக் கருத்துடன் பின்பற்றி நாட்டுப்பணி புரியும் இச் செல்வர், காரைக்குடி நகரசபை அங்கத்தினராக இருந்து, ஊருக்கு நன்மை புரிந்து வருவது அனைவரும் அறிந்ததே. இத்துடன் தமிழ் நாட்டிற்கே புதிதான ஒரு அரிய தருமத்தை இந்நல்லார் நடத்தி வருகிறார். அதுவே சோக்கலிங்கம் சுகாதார நிலையம். இந்நிலையத்தினால் பலர் உடல் நலம் பெற்று வாழுகின்றனர். மந்திரி ராஜன் இந்நிலயத்தைப் போற்றி யிருக்கிறார். இந்நிலயத்தை இச்செல்வர் பெருஞ் செலவு செய்து கண்போலக் காத்துவருகிறார். இந்நிலயம் செட்டிநாட்டுச் சுகாதாரத்திற்கே ஒரு அரிய நிலைக்களனாகி, ஆவடி, லோனாவாலா, பெஜவாடா முதலிய இடங்களில் உள்ள உடல் நல நிலயங்களைப்போல நிலவுக! இவ்வாறு அரிய பொது நலங்களைச் செய்துவரும் இப்பேரன்பர் ஆதரவை அன்பு நிலையம் பெற்றது நாம் செய்த பாக்கியமே. இவ்வரிய நாடகத்தை வெளியிட்டதுடன் படக்காட்சியிலும் காட்டுவிக்க ஆர்வங்கொண்டுள்ள அவர் கருத்து நிறைவேறுக! இத்தகைய தமிழபிமானிகளால்தான் நமது தாய் மொழியும், தாய்நாடும் முன்னேறும். இப்பேரன்பருக்குத் திருவும் செல்வமும், இறைவனருளாற் பெருகியோங்குக!

இந்நூலை அச்சிடப் பேருதவி செய்து, அச்சுத் தாட்களைப் பார்த்த எமது அன்புப் புலவர், செந்தமிழ்ச் செல்வர் கு. மதுரை முதலியார் அவர்களுக்கு எமது நன்றியைத்

தெரிவிக்கிறோம். இந்நூலை விரைவாகப் பிழையின்றி அச்சிட்டுத் தந்த ஜூபிடர் அச்சுக்கூடத்தின் உரிமையாளர் திரு. வேங்கடேச ஐயர் அவர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக. அன்பர் துணையாலும், பெரியார் ஆசியாலும், இறைவன் அருளாலும் எங்கள் தமிழ் விரதம் நிறைவேறுக!

எந்தாய் வாழ்க!

இராமச்சந்திரபுரம்<br>1-1-1938.

அன்பு நிலயத்தார்.

# புதுமையும் பழமையும்

---

## பாத்திரங்கள் :

1. குணக்கொழுந்து :—மோசக்காரன், பெண்பித்தன், வேஷபக்தன், 30 வயதுடையவன்.
2. குப்பண்ணுச்சாரி :—ஸ்ரீரங்கத்தில் வைதீகச் செல்வர், ராமபக்தர், உலக விவகாரம் தெரியாதவர், 50 வயதுடையவர்.
3. சேஷிப்பாட்டி :—குப்பண்ணுச் சாரியின் தாயார், பழைய பழக்க வழக்க ஆசாரங்களில் அழுத்தமுள்ளவள், புதுமையை வெறுப்பவள், 70 வயதுடையவள்.
4. செல்லம் :—குப்பண்ணுச்சாரியின் இரண்டாம் மனைவி, படித்தவள், 35 வயதுடையவள்.
5. சீமா ராகவன் :—குப்பண்ணுச்சாரி மகன், கல்லூரியில் படிக்கிறான், 18 வயதுடையவன்.
6. கமலம் :—குப்பண்ணுச்சாரி மகள், பத்தாவது படிக்கிறாள், நல்ல சாரீரமும், அழகும், சீர்திருத்தத்தில் விருப்பமுமுள்ளவள், வேணுவின் உயிர்க் காதலி, ஹிந்தி தெரிந்தவள், 16 வயதுடையவள்.
7. பங்கஜம் :—பாலிய விதவை, மகிளா மந்திரத்தில் பாட்டுச் சொல்லிக்கொடுத்து ஜீவிக்கிறாள், கமலத்

திற்கு ஹிந்தியும் சங்கீதமும் கற்றுத் தருகிறாள், கமலத்தின் உண்மையான தோழி, கோபாலனைக் காதலிக்கிறாள், கமலத்திற்கும் வேணுவிற்கும் காதல் வெற்றிபெறச் செய்கிறாள், 25 வயதுடைய வள்.

8. கோபாலன் :—பிரமசாரி, ஹிந்தி பிரசாரசபைக் காரிய தரிசி, குணவான், சீர்திருத்தச் சங்கத்தைச் சேர்ந் தவன், பங்கஜத்தைக் காதலித்து மணக்கிறான், 30 வயதுடையவன்.

9. வேணு :—கமலத்தின் காதலன், ஜவான், எம். ஏ., அழகன், அறிவாளி, முன்னேற்றச் சங்கக் காரிய தரிசி, வாலிபர்களால் நன்குமதிக்கப்பட்ட சீர் திருத்தவாதி, பிரபலமான பாரிஸ்டர் ரங்கராஜா வின் குமாரன், 24 வயதுடையவன்.

10. தாசி கோமதி :—குணக்கொழுந்தின் வைப்பாட்டி, பாட்டு, நடனம் ஆகிய இரண்டிலும் பேர்போன வள், ஆஷாடபூதி மோசஞ்செய்து சம்பாதிக் கும் பொருளெல்லாம் இவளிடம் வந்துசேருகின் றன, ஆஷாடபூதியின் மோசத்தை அறிந்து வெளிப் படுத்துகிறாள், முடிவில் விபசாரத்தை வெறுத்து விரக்தியடைகிறாள், 30 வயதுடையவள்.

11. 144 துரைக்கண்ணு :—போலீஸ்காரன்.

12. போலீஸ் அதிகாரி முதலியோர்.

---

# புதுமையும் பழமையும்

## காட்சி 1

[வைரவிலாஸ், கோமதியின் 1-வது பள்ளியறை, சலவைக்கல் பதித்தது. சுவரில் மன்மதன் உருவம் கரும்பு வில்லுடன் அலங்கரிக்கப்பட்டுள்ளது. மலர்கள் ஆங்காங்கு அழகான செம்புகளில் வைக்கப்பட்டுள்ளன. ஊதுவர்த்தி, மட்டிப்பால் வாசனை வீசுகிறது. தங்கத்தட்டில் கனிகள், பளபளப்பான சாராயப்புட்டிகள்; அலங்காரப்பஞ்சணை; வெல்வெட்டுச் சோபாவில் குணக்கொழுந்து ஜோராக சாய்ந்துகொண்டிருக்கிறான். மார்பில் சந்தனம். கோமதி, சரிகை போட்ட மெல்லிய மஸ்லின் அணிந்திருக்கிறாள். காது, மூக்கு, கூந்தல், மார்பு, இடை எல்லாம் வைரக்கனல் பறக்கின்றது. குணக்கொழுந்திற்கு உபசாரஞ்செய்கிறாள்.]

குணக் :—பரமசுகம், பரமசுகம்! கோமு, நீயே வைகுண்டம். கட்டிக் கரும்பே, உன் அதரமே தேவாமிருதம். ஒரு முத்தம்.

கோமதி :—என் தங்க ராஜா! முத்து ராஜா! (முத்தமிடல்) என் கையால் இந்த அன்பு மலர்களை என் பொன்னு ராஜாவுக்குச் சூட்டுகிறேன் (பூச்சூட்டல்).

குணக் :—முத்தே, உன்மேல் பித்தானேன். என் உடல், பொருள், ஆவியெல்லாம் இந்த இன்பரசமாக உனக்கு ஊட்டுகிறேன். (விஸ்கி தருகிறான்). காதல் தெய்வமே, உனது பிரசாதம் கொடுத்துவைக்கவேண்டுமே! (அவள் குடித்த மீதியைத் தான் குடிக்கிறான்).

கோமதி:—மனோகரா, என் காதலை இந்தத் தாம்பூலத்தில் மடித்து ஊட்டுகிறேன். (தாம்பூலம் தருதல்)

குணக் :—(பாடுகிறான்.)

ராகம் அடாணா] [தாளம் ரூபகம்

என்ன சொகுசடி கண்ணே,
என்ன சொகுசடி கண்ணே, — உன்
இன்பழுத் தென்மோட்ச விண்ணே,—உன்
கன்னக்கனியென்றன் அமுதம்—வாட்
கண்களோ காதற் குமுதம் (என்ன)

மனோரஞ்சிதமே, உயிருள்ள காதல் சித்திரமே, உன்னைத் தலைமுதல் கால்மட்டும் தங்கமாக இழைக்கட்டுமா?

கோமதி:—தங்கள் அன்பே என் ஆபரணம். இப்போது இன்னொருவடம் வைரச்சங்கிலி தங்கள் கையினால் சூட்டினால்......

குணக் :—ஆஹா...நாளையே சமன்லால் கம்பெனியில் உத்திரவு கொடுக்கிறேன். உன் காதலாகிய வயிரச்சங்கிலியில் கட்டுண்டேன். ரதிக்கிளியே, எப்போதும் இப்படியே இன்பசாகரத்தில் நீந்திக்கொண்டிருப்போம்!

கோமதி :—தாங்களே என் படகு. என் காதல், கடலினும் பெரிது. ஒரு நொடி பிரிந்தால், உயிர் துடிக்கிறது.

குணக் :—முருகனிடம் குயில் தூதனுப்பிய காதலி போலப் பாடி, அன்று, மோகனவிலாசத்தில் நர்த்தனம் செய்தாயே; ஆ! தேவலோக ரம்பை உன்னிடம் கற்றுக்கொள்ள மறுபடி பூலோகத்திற்கு வந்து உன் பணிப்பெண்ணாயிருக்கவேண்டும். நான் வைகுண்டம்

போனால், முதலில் இந்த வரம் கேட்பேன். கண்ணே, எங்கே அந்தப் பாட்டைப் பாடி, நடித்து, பாவனைகளைச் சரியாகக் காட்டு; நான் சுதி மீட்டுகிறேன்.

கோமதி :—(பாடியாடல், குணக்கொழுந்து சுதி போடுகிறான்).

ராகம் காம்போதி] [தாளம் சாப்பு

'பேயாண்டி தனைக்கண்டு' என்னும் குஞ்சரிபதம் போலப் பாடலாம்

பல்லவி

குயிலே யுனக்கனந்த கோடி நமஸ்காரம்
குமரன் வரக் கூவுவாய் (குயிலே)

அனுபல்லவி

மயில்கள் உலாவும் மலை மாங்கனிச் சோலையில்,
மருவி யெனைப் பிரிந்த முருகன் அருகில் வளர் (குயிலே)

குணக் :—சபாஷ்! ஷோக்கு! அப்படி! சொகுசு! தமிழ்க் கலையே உன்னால் புதுமை பெற்றது. தசரிசநித பதப தப, பதரிசநித பதபதப.....குயிலே......என் குயிலே......செல்லக் குயிலே......இன்பக் குயிலே யுனக்கனந்த...கோடி இ...நமஸ்காரம்......

கோமதி :—குமரன் வரக்கூவுவாய்!

சரணம்

அழகன், அமுதன் என் ஆவியுண்ட கள்வன்,
அந்தி மயக்கத்தில் புத்தி மயக்கினான்.
வழிகாட்ட வந்தவன்......விழிகாட்டி யழைத்தென்னை
வாரி முத்தமிட்டுப் பேர்சொல்லி மறைந்தனன். (குயிலே)

குணக் :—பலே......மகபதசரிககரிக......வாரீ இஇஇ முத்த
மிட்டு......என்னை வா...ரீ...முத்தமிட்டு

(முத்தமிடுகிறான்)

(திரைவிழுதல்)

---

## காட்சி 2

[குப்பண்ணாச்சாரி மாளிகை, செல்லம் நண்பர் கூடும் நாகரிகக் கூடம். பெரிய தேக்கு மேஜையைச் சுற்றி மெத்தை நாற்காலிகள் காண்கின்றன. கண்ணாடி பீரோக்களில் புத்தகங்கள்; ஒரு அலமாரியில் பத்திரிகைகள் உள்ளன; நான்கு சுவர்களிலும் நிலைக்கண்ணாடிகள்; மேலே திலகர், லாலாஜி, அரவிந்தர், காந்தி, லெனின், மஜினி, நெப்போலியன், க்ராம்வெல், வ. வெ. சு. ஐயர், பாரதியார் முதலியோர் படங்கள் அலங்காரமாகக் காண்கின்றன. ஒரு மூலையில் டெலிபோன் உள்ளது. சீமானும், கமலமும் Renaissance, (மறுமலர்ச்சி) என்ற பத்திரிகைத் தாட்களைப் படித்துக் கொண்டிருக்கின்றனர்.]

கமலம் :—பேஷ்! நன்றாய்ப் பேசினாள் கமலாபாய்!

“பெண்கள் நாட்டிற் பாதியல்லவா? பெண்கள் வீட்டின் அரசிகளல்லவா? வாழ்வின் சக்திகளல்லவா? மானிடத்திற் பாதியல்லவா? வலக் கண்ணிற்குள்ள சுதந்திரம் இடக் கண்ணுக்கு மறுப்பதேன்? தோழர்களே, நமது காங்கிரஸ் வெற்றி பெற்றது; நமது சகோதரிகள் சட்டசபையில் வீற்றிருக்கின்றனர்! பெண்ணுலகம் முன்னேறுகிறது! குழந்தைக் கலியாணம், கிழட்டுக் கலியாணம், வரசுல்கம், கைம்பெண் கண்ணீர், விபசார விடுதிகள் எல்லாம் வேரோடொழிந்தன. பெண்கள் தலைநிமிர்ந்து நடக்கின்

றனர். பெண்ணை இழிவு செய்யும் தீமைகளைப் பொருது வென்றோம்! முடிவாக, இன்று சொத்துரிமை கேட்கிறோம். இஸ்லாமியர் தமது பெண்களுக்குச் சொத்துரிமை தருகின் றனர். இந்து-முஸ்லிம் ஒற்றுமையை வேண்டும் நாமும் ஏன் அவ்வாறு செய்யலாகாது?...”

சீமான்:—தீர்மானம் நிறைவேறியதே! காங்கிரஸ் சட்ட சபை பொது நலத் தொண்டர் கூட்டம்; சமூ கத்திற்கு எதெது நன்மையோ அதை யெல்லாம் குறித்துவைத்துக் கொண்டு நாளுக்கு ஒன்றாக மள மளவென்று நிறைவேற்றி வருகிறார்களே! மஹாத்மா தான் இப்போது நாட்டை ஆளுகிறார். தேசபக்தர் கையில் அரசியல் உள்ளது. நாட்டிற்கு இது நன்மை என்று ஒரு அங்கத்தினர் வாயெடுத்தால், எல்லாரும், ‘ததாஸ்து, அப்படியே நடக்கட்டும்’ என்று ஆமோதிக் கிறார்களே! சாதி, மதம், ஆண்; பெண் வேறுபாடுக ளெல்லாம் பழைய காலம்! இப்போது எங்கும் ஸமதர் மம் என்பதே பேச்சு.

கமலம்:—ஆம், சுதேசத்தை ஆள, அன்னியரைவிடச் சுதே சிகளுக்கு ஆயிரம் மடங்கு திறமையுண்டு என்பது விளங்கிவிட்டது! வெல்லிங்டன் தர்பார் முடிந்தது. வீடுதோறும் நாட்டுக்கொடி பறக்கிறது. சிறை காத்த தேசபக்தரெல்லாம் விடுதலை பெற்றுக் கிராம நிர்மாண சேவை செய்கின்றனர். கள்ளுக்கடைகள் கட்டோ டொழிந்தன. ஏழைகளுக்கு உழைப்பும் பிழைப்பும் ஏராளமாகக் கிடைக்கின்றன. வறுமைப்புலியைக் குடிசைத்தொழில் வளர்ச்சியால் துரத்தி விட்டோம். கிராமங்களில் இராட்டினங்களும், கைத்தறிகளும்,

வீணையும் மிருதங்கமும் போல இன்பமாக ஒலிக்கின்றன! கூட்டங்களில் ஸி. ஐ. டிகள் இல்லை. பொலீஸாருக்கு வேலை குறைவு! ஜனங்கள் சந்தோஷமாக வரிப்பணம் கட்டுகின்றனர். ஆண், பெண் ஆகிய இருவருக்கும் கல்வி கட்டாயமாகவும், இனமாகவும் தருகிறார்கள்; காங்கிரஸ் ராஜ்யம் வாழ்க! முதன்மையாகப் பெண்கள் தலை நிமிர்ந்தனர்.

(சேஷிப்பாட்டி வருதல்)

சேஷி:—ராம, ராம, ராம! என்னடீ வம்பு! வைகுண்ட ஏகாதசி, பெருமாள்சேவை செய்யாமே தலை நிமிர்ந்தார்களாம்! என்னடீ வம்பு! பெ—ண்—டு—க—ள்——எங்கள் நாளையிலே, கண்ணுண்டு கட்டை விரலுண்டு! புருஷாளை நிமிர்ந்து பார்த்து நானறியேன்! இதென்னடீஇ காலம்!

சீமான்:—(சிரித்து) பாட்டீ, இது இருபதாவது நூற்றாண்டு; நாகரிக காலம்.

சேஷி:—அட உன் நா—க—ரி—கத்திலே கொள்ளிவைக்க! நா—க—ரி—கமாம்! தஸ்பிஸ்ஸின்னு மிலேச்ச பாஷை பேசிக்கொண்டு, புருஷாளோடே சரிசமனா மீடங்கி போட்டுக்கொண்டு, சிங்காரம் செய்து, கண்ணாடி போட்டு, அழகு பார்த்துக்கொண்டு, புருஷாளோடே மோடாரிலே போய்க்கொண்டு, ஆட்டம், கூட்டம், ஆர்ப்பாட்டம் பண்ணிக்கொண்டு, பல்லையிழித்துக் கொண்டு, பக்கம் பார்த்துக்கொண்டு!

கமலம்:—இன்னும் எத்தனை கொண்டு—நீ சொல்லிக் கொண்டேயிரு; நாகரிகம் முன்னேறிக்கொண்டே யிருக்கும்.

சேஷி :—மூளைக்கு மூன்று இலை வைக்கவில்லை, பேச்சைப் பாரு, சுண்டைக்காய் கடித்தது போல! அனுசாரச் சாயங்களைப் பூசிக்கொண்டு, பொய்ப்பல் வைத்து இழித்துக்கொண்டு, சீமைக்குப்பைகளை வாரி மூளையிலே அடைத்துக்கொண்டு......ஐயையோ! ஐயையோ!...

சீமான் :—என்ன பாட்டீ, தேள் கொட்டினதோ!

சேஷி :—அடி இதென்னடீ படிக்கிறாய்? கொம்பு மாதிரி 16 வயசுக் கன்னியாப்பெண்ணு ஆம்படையான் பெண்டாட்டி கதை படிக்கிறாளே!

கமலம் :—போ பாட்டி, பொய்யெல்லாம் சொல்லிக் கொண்டு..........

சேஷி :—அடி என்னையா ஏய்க்கிறாய்? இதோ ஆம்படையான் பெண்டாட்டி படம்!

கமலம் :—இல்லை பாட்டி. சட்ட சபையிலே தலைவர் கர்மராஜா பக்கத்திலே உபதலைவர் ஸ்ரீமதி ஜோதிமணி உட்கார்ந்திருக்கிறாள்.

சேஷி :—கெட்டது காலம்!

சீமான் :—காலம் முன்னே போய்க்கொண்டுதான் இருக்கிறது. உன் மூளைதான் சுழன்று போனது.

சேஷி :—அட நீ தாத்தாசாரி பேரனா! அட நீ குப்பண்ணா பிள்ளையா! பஷாண்டி! நெத்தியிலே சாணி அப்பட்டுமா! படிக்கப் படிக்கப் பாமரனாகிறாய்! உன் பூணூலுக்கு 2000 கொட்டியானது! ஒருநாள் சந்திஜபம் நீ சிரத்தையாகப் பண்ணி நானறியேன்! ஐங்குடுமியும், சட்டையும், கண்ணாடியும், அட்டணக்காலும், சவடாலும் பற்றி எரியிறதடா!

சீமான் :—பாட்டீ, ஷோக்கா யிருக்கவேண்டாமா ?

சேஷி :—அட உன் ஷோக்கிலே கொள்ளிவைக்க—ஒரு மடி ஆசாரம், கோவில் குளம், சாமி பூதம், பக்தி சிரத்தை, ஆசாரம் விவகாரம், கதை புராணம், விரதம் நோன்பு, பூஜை புரஸ்காரம், நியமம் நிஷ்டை, அடக்கம் ஒடுக்கம், மட்டு மரியாதை, கருத்து கவனம்.... வேண்டாமோ ?

கமலம் :—அகராதி முழுவதும் ஒப்பி.

சேஷி :—ஆமடீ வம்பி...வாடி வைகுண்ட சேவைக்கு வாடா...

சீமான் :—நீ போ வைகுண்ட சேவைக்கு; திரும்பி வராதே. நாங்கள் படிக்கிறோம்...

சேஷி :—உன் படிப்பிலே தீ வைக்க! கிருஷ்ணா, ராமா என்ற பேச்சுக் கிடையாது! அவாள் நாளையிலே ராமாயணம், பாரதம், பாகவதம், திருவாய்மொழி, ஸஹஸ்ர நாமம் வீட்டிலே முழங்கும். கிணீரென்று ஒரு சுலோகம் சொல்லி வியாக்யானம் பண்ணினுல், காது குளிரும். இந்த நாளைப் படிப்பைத்தான் பாரேன்! மிலேச்சக் குப்பைகளை யெல்லாம் மூளையிலே சுமத்திக் கொண்டு, ஓடுற பாம்பைப் பிடிக்கிற வயசிலே, கூனிக் குறுகி நெஞ்சு கூடுகட்டி, மூக்கண்ணுடி போட்டுக் கொண்டு, விடிந்தால் பத்திரிகை, அஸ்தமித்தால் பத்திரிகையிலேயே நாண்டுகொண்டு, ஊர் வம்பளந்து கொண்டு, பள்ளுப் பறை பதினெட்டுச் சாதியுடன் சம பந்தி போஜனம் பண்ணிக்கொண்டு, கொம்பு மாதிரி பெண்டுகளைக் கலியாண

மில்லாமல் வீட்டில் வைத்துக்கொண்டு, அறுத்துப் போனவளுக்குக் கோட்டுமேளம் கொட்டித் தாலி கட்டிக்கொண்டு, மீட்டங்கி பேசிக்கொண்டு...............

(ட்ரங் ட்ரங், ட்ரங்...டெலிபோன் மணி)

(செல்லம் வருதல்)

கமலம் :—வா அம்மா, பாட்டி பிரசங்கம் காதைத் தொளைக்கிறது.

சேஷி:—அடி, உனக்குச் சிபாரிசுக்கு அவள் வந்துவிட்டாள். நான் போகிறேன். ராம, ராம ராம......

(நாலடி சென்றதும், திரும்பிச் செல்லத்தைக் கவனிக்கிருள்).

செல்லம் :—(டெலிபோனில் பேசுகிருள்) ஹல்லோ.......... ஜானகிபாயா......சரி.......சந்தோஷம்.......காங்கிரஸ் மந்திரி சபை வந்த பிறகு நமது காரியமெல்லாம் ஜயந்தான்.......ஹல்லோ........சொத்துரிமை மசோதா நிறைவேறியதற்காக் கூட்டம்.....ஆம்.....மாலே 6. மணிக்கு...முன்னேற்ற மாளிகையிலே....அக்ராசனமா? ...வேணுதான்... 5-மணிக்கு மோட்டாரில் வரலாம். தயாராயிருப்பேன்...சரி...வந்தனம்.

(ட்ரக் டெலிபோன் பேச்சு நிற்றல்)

சேஷி :—என்னத்தைச் சொல்லுவேன்! ஒரு குழாயை வாயிலேயும் காதிலேயும் வச்சிக்கொண்டு ஊர்வம் பளக்கிருளே! காலம் கெட்டே போச்சு! இந்த நச்சுக் கௌளி வந்துதான் என் பேரனேக்கொண்டு போனது; அதை ஒடித்து வெந்நீரடுப்பிலே வைக்கிறேன் பார்.

செல்லம் :—என்ன மாமீ, கால முன்னேற்றத்தைக் காலேப் பிடித்திழுக்கமுடியுமா? அறிவு விரிவாகி வருகிறது.

பஞ்ச பூதத்திலும் உள்ள சூக்ஷ்மங்களை யெல்லாம் கண்டுபிடித்து நாம் சௌக்கியமாய் வாழ, ரயில், மோடார், டிராம், கப்பல், ஆகாயவிமானம், ரேடியோ, எல்லாம் கண்டுபிடித்திருக்கிறார்கள். உங்கள் சாபத்தால் அறிவும் காலவோட்டமும் நின்றுபோகுமா?

சேஷி:—நாட்டுப் பெண்ணே போதும்.

சீமான்:—பாட்டி, உன் பிரசங்கம் போதும்!

சேஷி:—அட இந்தக் குறும்பு ஆகாதடா! ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே பிறந்து இப்படியிருக்கக் கூடாதடா!

செல்லம்:—பின்னே எப்படி யிருக்கவேணும்?

(குணக்கொழுந்து வருதல்)

சேஷி:—அதோ வருகிறான் பாரு குணம், தங்கக்கம்பி. துவாதச நாமம், துளசிமாலை, வேஷ்டியை இடுப்பிலே எடுத்துக் கட்டிக்கொண்டு, ஆசாரமாக வருகிறான் பார்.

சீமான், கமலம்:—அந்த ஆஷாடபூதி முகத்தில் விழிக்க மாட்டோம்.

அம்மா போவோம்.

(செல்லம், கமலி, சீமான் செல்லல்)

குணக்:—தாழியில் வெண்ணெய்

தடங்கையால் விழுங்கிய

பேழ்வயிற் றெம்பிரான்

கண்டாய் உன்னைக் கூவுகின்றான்.

சேவிக்கிறேன், தாஸன்!

சேஷி:—வா, அப்பா, ஆயுசு நூறு. பெருமாள் சேவை யானதா?

குணக்:—ஆனது தாயே. ஸ்ரீயப்பதி கண்குளிரச் சேவை சாதித்தார். கூட்டம் நெருங்குமுன்னே சேவை செய்யுங்கள்.

சேஷி:—அப்பா, குப்பண்ணு பூஜைக்குக் காத்திருக்கிருன். போ, நான் வைகுண்ட சேவை செய்து வருகிறேன்.

(போதல்)

———

## காட்சி 3

### குப்பண்ணுச்சாரி பூஜை

[குப்பண்ணு—குணக்கொழுந்து—செல்லம். பூஜையறை மெழுகிக் கோலமிட்டு, செம்மண் பட்டை பூசித் தோரணங் கட்டிச் சுத்தமாயிருக்கிறது. பூஜைப் பெட்டியில் (Almira) மேல்தட்டில் ஸ்ரீ சீதாராம விக்ரகம்; கீழ்த்தட்டில் தவழ்ந்த கிருஷ்ணன். ஐந்து திரிபோட்ட திருவிளக்கு எரிகிறது. விக்ரகங்களுக்கு மாலேயும் மலர்களும் அலங்காரம், குப்பண்ணு, துவாதச பட்ட நாமம் பழுக்கப்போட்டுக் கொண்டு, பீதாம்பரம் உடுத்தி, அரையில் வெண்பட்டு அங்கவஸ்திரம் கட்டிக்கொண்டு, காதில் துளசிவைத்துக்கொண்டு, மார்பில் துளசிமாலே யணிந்து பூஜை செய்கிருர். காட்சி தொடங்கும்போது தீபாராதனே நடக்கிறது.)

குப்பண்ணு:—(தீபங்காட்டிக் கொண்டே)

ஒளிமணி வண்ண னென்கோ!
ஒருவனென் றேத்த நின்ற
நளிர்மதிச் சடைய னென்கோ!
நான்முகக் கடவு ளென்கோ!

அளிமகிழ் உலக மெல்லாம்
படைத்தவை யேத்த நின்ற
களிமலர்த் துளவன், எம்மான்
கண்ணனை மாயனையே !

ஸ்ரீஹரீ, ஸ்ரீஹரீ, வைகுண்டவாசா ! ராமா, ராமா, க்ருஷ்ணு, க்ருஷ்ணு, (உருகி நிற்கிறார்)

(பிரவேசம் ஆஷாடபூதி)

குண :—(நடனம் செய்து கொண்டே) க்ருஷ்ணு, ராமா, கோவிந்தா, ஹரே ராமா, க்ருஷ்ணு, கோவிந்தா.

குப்ப :—(இருவரும் ஆவேசமாக நர்த்தனம் செய்தல். குப்பண்ணு பார்க்காதிருக்கும்போது, குணக்கொழுந்து கேலி செய்கிறான்.)

க்ருஷ்ணு, ராமா, கோவிந்தா.

குணக் :— ஹரே, ராமா, க்ருஷ்ணு, கோவிந்தா.

குப்பண் :—கிருஷ்ணுனந்த முகுந்த முராரே !

குணக் :— வாமன, மாதவ, கோவிந்தா.

குப்பண் :—ஸ்ரீதர, கேசவ, ராகவ, விண்ணே !

குணக் :— லக்ஷ்மீ நாயக! நரசிம்ஹா.

(ஆட்டம் பலப்படுகிறது)

குப்பண் :—நந்த நந்தன, கோவிந்தா.

குணக் :—ஹரே, ராமா, க்ருஷ்ணு, கோவிந்தா.

குப்பண் :—க்ருஷ்ணுனந்த முகுந்த முராரே! க்ருஷ்ணு ! க்ருஷ்ணு !

(பூர்வராகத்தில் சொக்கிவிழுகிறார்)

ஸ்ரீஹரி ! ஸ்ரீஹரீ ! வைகுண்டவாசா.

குணக் :—அப்பா, எழுந்திரு. பெருமாள் அதிசீக்கிரம் உன்னை வைகுண்டத்திற்கு வரச்சொல்லி நாரதரை அனுப்புவார்.

குப்பண் :—ஸ்ரீஹரீ, ஸ்ரீஹரீ, நாராயண, நாராயண.

குணக் :—அப்பா, இன்னொரு தடவை! நர்த்தனாநந்தம்!
நாராயணம் பஜே நாராயணம்.

குப்பண் :—லக்ஷ்மி நாராயணம் பஜே நாராயணம்!

(ஆட்டம் பலம்)

[செல்லம் வருதல்]

செல்லம் :—இதென்ன அமளி! ஒரு மாதமாக ஆட்டம்! வீடு இரண்டு படுகிறதே! மணி இரண்டாயிற்றே! கொஞ்சம் பலகாரம் பண்ண வாருங்கள். வீடு வாசலை கவனிக்காமல் ஒரேடியாகப் பரவசக் கடலில் குதித்து மூழ்கினால், குடும்பம் நடைபெற வேண்டாவா?

குப்பண் :—வைகுண்ட ஏகாதசி! தெரியாதா! உண்டியே உடையே உகந்தோடிடும் மண்டலத் தொடும் கூடுவதில்லையாம். நாராயணம்பஜே நாராயணம்!

குணக் :—நாராயணம் பஜே! அப்படிச் சொல்லு அப்பா! லக்ஷ்மி நாராயணம்!

செல்லம் :—கூடக் கூத்தாட ஆள் கிடைத்தது! போதும்! அகாலமானது! சாப்பிட வாருங்கள்.

(போகிறாள்)

குப்பண் :—ஜலபானம் பண்ணமாட்டேன்.

குணக் :—வைகுண்டப் பெருமாள் திருவடித் தாமரைத் தேன் தான் அப்பாவுக்குச் சாப்பாடு. இருந்தாலும், அப்பா வயிறு வாடினால் எனக்குப் பொறுக்குமா?

ஏகாதசி விரதம்! சாதந்தான் கூடாது. திருக்கண்ணமுது, தயிர்வடை, வகையராக்கள்-பெருமாளுக்காகவே அமிசயித்தது; கொஞ்சம் ஜாடையாகப் போட்டு வைக்கலாமே!

குப்பண்:—ஏகாதசி யன்று சாப்பிட்டால் எமலோகந்தான் கிடைக்கும்.

குணக்:—சாப்பிடவேண்டாம் - சமயலறையை எட்டிப் பார்த்து வரலாம். அப்பா என்பக்கத்திலே இருந்தால் போதும்! தேவாள் சமயல் கட்டுக்கு ஏழட்டும்.

(கையைப்பிடித்து இழுத்துக்கொண்டே போகிறான்)

---

## காட்சி 4

### சேஷிப்பாட்டி—சீமான்

[சேஷிப்பாட்டி ராம ஜபம் பண்ணிக்கொண்டே கோவிலுக்குப் போகிறாள். வழியில் சீமான் கால் பந்தை (6th No. foot ball) எடுத்துக்கொண்டு முன்னேற்றச் சங்கத்திற்கு விளையாடப் போகிறான்.]

சேஷி:—ராம, ராம! சூனிய நெத்தியோடே எதிரே வராதேடா. ஒத்தைப் பிராமணன்—கோயிலுக்குப் போகிறேன்!

சீமான்:—நீ முட்டாக்குப் போட்டுக்கொண்டு எதிரே வராதே; அபசகுனம்! பந்தாடப் போகிறேன், கை கால் ஒடிந்தால்?

சேஷி :—உன் பந்திலே தீயை வைக்க! இந்தத் தோலைத் தொடலர்மா! கண்ட கண்ட பயல்களோடே விளையாடி வந்து, வீட்டிலே தீண்டல் கலக்கிறாய். நமது பெருமாளுக்கு இது ஆகுமா? போடா ராம ஜபம் பண்ணு.

சீமான் :—பலம் வேண்டும் என்று பகவான் கீதையிலே சொல்லியிருக்கிறார். நான் பந்தாடிக்கொண்டே ராம ஜபம் பண்ணுவேன்.

சேஷி:—நேராக வீட்டுக்குப் போய்க் குணக்கொழுந்தோடே ஜபம் பண்ணடா, மூஞ்சிலே களையுண்டாகும்.

சீமான் :—நேராக வேணுவிடம் போகிறேன். அவன் எம். ஏ வில் தேறிவிட்டான்.

சேஷி :—ஐயோ! அது பரிக்ஷை வேறே தேரிடுத்தா!

சீமான் :—அதற்காக விருந்து நடத்துகிறோம்.

சேஷி:—விருந்தாவது விளக்குமாறாவது! சுசி, ருசி, ஆசாரம், சந்தி, ஜபம் கிடையாது. எல்லாரும் ஒன்றாக உட்கார்ந்து, சாப்பிட்டு, ஜன்மத்தைப் பாழாக்குங்கள்! வேணுவாம் விளக்குமாறும்! அவன் பேரைச் சொல்லாதே. அவனோடே சாப்பிட்டால் அரைப்படி பஞ்சகவ்யம் குடித்து, சங்கல்பம் சொல்லி, ஸ்நானம் செய்து தான் வீட்டில் காலை வைக்கவேண்டும். வாரம், நட்சத்திரம் பார்க்காமல், ருதுமதி விவாகமாம், விதவா கல்யாணமாம், சமபந்தியாம், பெண்டுகள் "லெச்சர்" பண்ணறதாம்,—அவனாலேதான் கலி முத்திப் போச்சு; காலம் கெட்டுப் போச்சு.

சீமான் :—முன்னே போகிற கால வெள்ளத்தில் முட்டிக் கொள். நான் போகிறேன், விருந்து முடிந்து கமலி யுடன் வருவேன். அப்பாவிடம் சொல்லு.

சேஷி :—அட நீ குப்பண்ணு பிள்ளையா ?

சீமா :—நீ என் பாட்டிதானு ? (போகிறுன்)

சேஷி :—ராம, ராம, ராம; இந்த அனுசாரக் கூடங்களை யெல்லாம் பத்து வருஷமாவது மூடிவிட்டுக் குழந்தை களை ராம ஜபம் பண்ணச் சொல்லவேணும். ராம, ராம. தாத்தாசாரி பேரனுக்கு முகத்திலே துளி களை இல்லை...ஹூம் !

சோப்பும், கத்தியும், சந்தி ஜபத்தை வழித்தெறிந் தன.

கலிகாவதாரப் பெருமாள் குதிரைமேலே வந்துதான் இந்த அக்ரமங்களை அழிக்கவேண்டும் ! ராம ராம...[போதல்]

---

## காட்சி 5

### வாலிபர் முன்னேற்றச் சங்கம்

[வேணு எம். ஏ. தேறியதற்காக முன்னேற்றச் சங்கச் சகோதரர் விருந்து நடத்துகின்றனர். விருந்து, பாட்டு முடிந்ததும் வேணு அறையில் நெருங்கிய நண்பர் கூடிப் பேசுகின்றனர். வேணு, கோபாலன், சீமான், பங்கஜம், கமலம் முதலி யோர் ஒரு வட்ட மேஜையைச் சுற்றி நாற்காலியில் அமர்ந்தி ருக்கின்றனர். மேஜைமேல் அழகிய பூஞ்செம்பு (Flower vase) உள்ளது, ஒரு கடிகாரமும் உள்ளது. அலமாரிகளில் புத்தகங்கள், சுவரில் பரமஹம்ஸர், விவேகானந்தர், ராம

தீர்த்தர், அரவிந்தர், காந்தி, ரமண மஹரிஷிகள் முதலியோர் படங்கள்]

கோபாலன்:—ஹேவ், சுகமான விருந்து.

பங்கஜம் :—இன்று, கண், காது, மனம், வயிறு அனைத்திற்கும் சுகமான விருந்துதான் !

வேணு :—நமது கொள்கைகளெல்லாம் இம்மாதிரியே இன்ப விருந்துண்ணட்டும்!

பங்கஜம் :—நமது எண்ணங்கள் மங்களவிருந்துண்ணட்டும் ! (கமலத்தையும் வேணுவையும் பார்க்கிருள்; கமலம் புன்னகையுடன் பங்கஜத்தைப் பார்க்கிருள்.)

வேணு :—நாமெல்லாம் இப்படிச் சுதந்திரமாகக் கூடிப் பேசுவதே முன்னேற்ற விருந்தல்லவா ?

சீமான் :—எல்லா விருந்தும் ஒன்றுசேர்ந்தது உனது நட்பு விருந்து !

பங்கஜம் :—நமது நட்பு மற்ருெரு மங்கள விருந்தை அதி சீக்கிரம் எதிர்பார்க்கிறது.

கோபாலன் :—சுபமஸ்து ! ஒன்ருய்ப் போவானேன் ; இரண்டு சுப விருந்துகளை என் மனம் ஆவலுடன் எதிர் பார்க்கிறது.

(விழிகள் கூடுதல்; சற்று மௌனம்)

கோபாலன் :—அது அப்படி இருக்கட்டும். வேணு, மேலே என்ன யோசனை ? தகப்பனர் என்ன சொல்லுகிருர் ?

வேணு :—என்னை அடுத்த மாதமே ஐ. ஸி. எஸ். படிக்கச் சீமைக்கு அனுப்ப ஒரு காலில் நிற்கிருர். அவருக்கும்

எனக்கும் கொள்கைகளில் வித்தியாசமில்லை. இருந்தாலும், கலெக்டர் உத்தியோகம் பெறுவதைவிட மனித சமுதாயத்திற்கு நான் செய்யவேண்டிய ஒரு தொண்டு இருக்கிறது; ஆற்றலும் உள்ளது; எனது வாழ்வை நான் உண்மைக்கே நிவேதிக்க உறுதி கொண்டுள்ளேன்.

எல்லாரும் :—வேணுவின் உறுதி வெற்றி பெறுக.

பங்கஜம் :—ஏற்கனவே தாங்கள் செய்துள்ள சமூகப்பணி அபாரமானது. தங்கள் ஊழியத்தால், இன்று இவ்வூரில் குழந்தைக் கலியாணமும் கைம்பெண் கண்ணீரும், வரசுல்கமும் அரியவாயின. நாட்டிற்கேற்ற அறிவு, தொழில்களில் இவ்வூர் வாலிபர்கள் முன்னேறியிருக்கின்றனர். இந்து சமுதாயத்தை அழுக்குப் படுத்தும் தீண்டாமையும் ஒழிந்தது.

வேணு :—பங்கஜம், மகிளா மந்திரத்தில் எத்தனையோ அனுதைப் பெண்களுக்கும், கைம் பெண்களுக்கும் ஆறுதலளிக்க எனது வலக்கை போலுதவிய உனக்கே அப்பெருமை தகும். எத்தனையோ வாலிபக் கைம்பெண்கள் நமது முயற்சியால் மறுமணம் புரிந்து சுகமாக வாழுகின்றனர். இன்னொரு இளங்கைம்பெண்ணின் மனத்தை மகிழ்விக்க வேண்டும். அது கை கூடினுல், கோபாலனுக்கும் எனக்கும் பரம சந்தோஷம்!

கோபாலன் :—எல்லாருக்கும் சந்தோஷமே! வேணு, முடிவாக உனது உத்தேசமென்ன?

வேணு :—நண்ப, எனது கடவுள் உயிர்த் தொகுதியே; இடைவிடாது தொண்டு செய்வதே எனது வழிபாடு; அன்பே மலர்; அறிவே ஒளி; எனது வாழ்வே நிவே-

தனம். நண்ப, நமது பணி இப்போதுதான் ஆரம் பித்துள்ளது. இன்னும் எவ்வளவோ காரியம் நடக்க வேண்டும். நமது வாலிபர்களுக்கு நல்ல கல்வியில்லை. சாந்தி நிகேதனம், காங்கிரி இந்து சர்வகலா சாலை போன்று நமது வாலிபகர்களுக்குப் பெரிய சர்வகலா நிலயம் ஏற்படுத்தவேண்டும். அதில், தமிழ், ஹிந்தி, ஆங்கிலம், சாத்திரங்கள், வாழ்விற்கு வேண்டிய பல தொழில்களும் தகுந்த முறையில் பயிற்றவேண்டும். பிறகு, சாதி, மத ஒற்றுமைக்காகவும், சமுதாய முன் னேற்றத்திற்காகவும் இந்த முன்னேற்றச் சங்கத்தை விரிவாக்கி, அரிய பணிகள் புரியவேண்டும். நமது ஊரில் உண்ண, உடுக்க ஏதுமின்றி, ஆயிரக் கணக்கான ஏழைகள் தெருக்களில் அனாதரவாகத் தவிக்கின் றனர். அவர்களுக்கு அனாதை விடுதி யேற்படுத்த வேண்டும். அதில் அனாதைக் குழந்தைகளுக்கு உடை, யுணவு தந்து, நல்ல கல்விவியும், தக்கதொழி லும் பயிற்றி ஆளாக்கவேண்டும். கன்னிகைகளும், இளங் கைம்பெண்களும் பரிதாபமாக வருந்து கின்றனர். அவர்களுக்கு நமது மகிளா மந்திரத்தில் தாராளமான சௌகரியங்கள் தந்து ஆதரிக்கவேண் டும். நமது சங்கத்திற்காக, "முன்னேற்றம்" (Progress) என்ற மாதப் பத்திரிகை வர்ணப்படங் களுடன் நடத்தவேண்டும். தக்க வாலிபர்களைத் தொழிற் பயிற்சிக்கு ஐரோப்பாவிற்கு அனுப்ப வேண்டும். முதல், தந்து தொழில் வளர்த்து, நாட் டின் வறுமையை ஒழிக்கவேண்டும். எத்தனையோ எண்ணங்கள் !

(மணி எட்டு அடித்தல்)

பங்கஜம் :—சுபம், சுபம்! காலதேவி உனது எண்ணங்களுக்கு வெற்றி மணி யடிக்கிறாள்! அவை இனிது நிறைவேறுக. அவைக்கேற்ற துணைவியும் உனக்கு அமைந்தாள்.

(கமலாவைப் பார்த்தல்)

கமலா :—பங்கஜம், மணி எட்டிற்கு வருவதாக அம்மாளிடம் தெரிவித்தேன்.

வேணு :—ஆம். இனி நாம் நாளைச் சந்திப்போம். எனது மோட்டாரில் எல்லாருக்கும் இடமிருக்கிறது. வாருங்கள்!

(எல்லோரும் போதல்)

---

## காட்சி 6

[கமலத்தின் அறை. பங்கஜம் வீணை சொல்லிக் கொடுக்கிறாள்.]

கமலம், பங்கஜம்:—வைஷ்ணவ ஜநதோ தேனே கஹியே!
ஜே பீடபராயி ஜாணே ரே!

சா சசா பாத பா மாம பாம காரீக மாகா ரீ
சசா சரிகா

ரீ ரீ சா
வைஷ்ணவ ஜநதோ தேனே எ
கஹி யே!

பங்கஜம் :—பரது கே உப காரே தோயே!

கமலம் :—(வீணையில்) பரதுகே உபகாரே தோயே!

இருவரும் :—பரது கே உப காரே தோயே மன அபிமான
ந ஆணே ரே!

(செல்லம், கோபாலன் வருதல்)

எல்லாரும் :—வைஷ்ணவ ஜநதோ தேனே ஏ
கஹி யே, கஹியே, கஹியே!
ஜே பீட பராயி ஜாணேரே!

செல்லம்:—இந்தப் பாட்டிற்கு ஒரு மந்திர சக்தி இருக்கிறது!

பங்கஜம் :—அதனுலேதான் மஹாத்மா காந்திக்கு இதில் அவ்வளவு உருக்கம்.

கோபாலன் :—எனக்கு இந்தப்பாட்டுத் தாரக மந்திரம்; சர்வ சமய சாரமும் இதில் அடக்கம்.

பங்கஜம் :—ஸகல லோகமாம் ஸஹுனே வந்தே,
நிந்தாநகரே கோனீரே.

எல்லாரும் :—வைஷ்ணவ ஜனதோ!

பங்கஜம் :—வாச காச மன நிஸ்சலராகே.

கமலம் :—வாச காச மன நிஸ்—சலராஅகே.

பங்கஜம் :—அச்சா, டீக், மீடாஹை!

இருவரும் :—வாச காச மன நிஸ்சலராகே
தன தன ஜனநீ தேநீ ரே.

கமலம் :—தன தன ஜனநீஇ தேநீஇ ரே ஏ.

செல்லம் :—பஹுத் அச்சா!

எல்லாரும் :—வைஷ்ணவ ஜநதோ தேனே......

(சேஷிப்பாட்டி வருதல்)

சேஷி :—இத்தனைபேரும் கூடிக் காரே பூரேன்னு லாடன் பாஷையிலே தொண்டையை உருட்டுகிறதுகளே, இந்தப் பங்கஜம் வந்தால் கோபாலனும் வருகிறன். இந்தக் கமலிக்கு இவர்கள் உபதேசம் பலமானது! என்னடீ பாட்டுக் கச்சேரி.............!

செல்லம் :—மாமி, வாருங்கள், உட்காருங்கள், உங்களுக்கு மிகவும் பிடித்த பாட்டு.

சேஷி :—ராம நாமமே கற்கண்டு; அதற்கு மிஞ்சிப் பாட்டுண்டோ?

செல்லம் :—அதிர்ஷ்டவசமாக இந்தப் பாட்டிலே ராம நாமம் வருகிறது. தப்பினேம். மாமி கேளுங்கோ... பங்கஜம்... ஆரம்பி.

பங்கஜம்-கமலம் :—வைஷ்ணவ ஜநதோதேனே கஹியே
ஜே பீட பராயீ ஜாணேரே!

சேஷி :—அப்படின்ன! வைஷ்ணவ ஜனங்களைக் கண்டால் பீடையெல்லாம் விலகிப்போகும் என்கிறன?

செல்லம் :—இல்லை, வைஷ்ணவன் யார்? அவனுடைய குணங்கள் என்ன என்று விஸ்தரிக்கிறர் கவி. பாட்டு முடிந்தவுடனே அர்த்தம் சொல்லுகிறேன்.

சேஷி :—ஆனல் பல்லுவம் பாடு.....கமலி...உம்...ஜமாய்!

கமலம் :—ஸமத்ருஷ்டி னேத்ருஷ்ணுத்யாகீ
பரஸ்த்ரீ ஜேனே மாதரே!

பங்கஜம்-கமலம் :—பரஸ்த்ரீ ஜேனே மாதரே.

செல்லம் :—இது வேணுவுக்குத் தகும்.

எல்லாரும் :—வைஷ்ணவ..............

பங்கஜம் :—ஜிவ்ஹாதகீ அஸத்யநபோலே பரதந நவஜாலே ஹாதரே வைணவ!

எல்லாரும் :—வைஷ்ணவ......

கமலம்-பங்கஜம் :—ராமநாம ஸுதாலீ லாகீ!

சேஷி :—அப்படிச் சொல்லு சமத்து! இன்னம் பத்துத் தரம் சொல்லு.

எல்லாரும் :—ராமநாம ஸுதாலீலாகீ!

(ஆவேசமாகக் குப்பண்ணு வருதல்)

குப் :—ராமா! ராம! ஹா உன்பெயர் அமுதம், தேன், பால், கற்கண்டு, கனிரஸம், சொல்லு ராம நாமம்.

எல்லாரும் :—ராம நாமஸுதாலீலாகீ!

(குப்பண்ணு நர்த்தனம் செய்கிறார்)

(குணக்கொழுந்து வருதல்)

சேஷி :—வா, குணம். குட்டிகள் சமத்து. ராம நாமாவளி நடக்கிறது.

குணம் :—அப்பா, ராமா என்றால் பரவசம் உண்டாகிறது. என் வேலையெல்லாம் விட்டு ஓடி வந்தேன். நடக்கட்டும்.

எல்லாரும் :—ராமநாம ஸுதாலீலாகீ
ஸகல தீரத தேனு தனமாம்ரே!

பங்கஜம்
கமலம் } வைஷ்ணவ ஜனதோ!

பங்கஜம் :—வணலோபீனே கபடரஹிதசே
காமக்ரோத நிவாப்யா ரே!

கமலம் :—பணே நர ஸைம்யோதே நும் தரசந
கரதாம், குல ஏகோதே தார்யாரே!

எல்லாரும் :—வைஷ்ணவ ஜநதோ !

குணம் :—அப்பா நாம் போவோம், ராம நாமம் அவ்வளவு தான். இனி நமது ஜபம் நடக்கட்டும்.

(குப்பண்ணவை இழுத்துச் செல்லுகிறுன்)

சேஷி :—தாத்பர்யம் சொல்லு, செல்லம்; கேட்போம். வட கலே வைஷ்ணவன் எப்படியிருப்பானும்?

செல்லம் :—மாமி, வைஷ்ணவன் இன்னொருவர் துக்கத்தைக் கண்டு உருகுவான் ; பரோபகாரம் செய்வான் ; எல்லாம் வாஸுதேவ மயமாகக் காண்பான் ; ஸமத்ருஷ்டியுள்ளவன்; எதையும் நிந்திக்கமாட்டான்; சஞ்சலப்படமாட்டான்; சத்தியவான் ; ஆசையாணவங்களே விட்டவன்; பரஸ்த்ரீகளேத் தாய்போல மதிப்பவன்; பொய் சொல்லாதவன் ; இன்னொருவர் சொத்துக்கு ஆசைப்படாதவன்; மோகமாயையில்லாதவன் ; மன வைராக்யமுள்ளவன்; ராம நாமத்தை எப்போதும் ஜபிப்பவன் ; கபடசூதற்றவன் ; காமக்ரோத மற்றவன்.

சேஷி :—எல்லாம் சரிதான் ; சரியான ஸ்ரீ வைஷ்ணவன் துவாதச நாமம் போட்டுக்கொள்ள வேண்டாமா ? துளசிமாலே போட்டுக்கொள்ள வேண்டாமா ? திரிகால சந்திஜபம் வேண்டாமா ? சௌச விதிகளே அனுசரிக்காதவன் வைஷ்ணவனு ? அதற்கு இத்தனே சௌசம் என்று தேசிகர் சொல்லியிருக்க, அதை

யேன் இந்தப்பாட்டிலே போடவில்லை! ஸ்ரீயரிடம் முத்திராதானம் செய்து கொள்ளவேண்டாமா? மறைவாக அமிசயிக்க வேண்டாமா? ஒரு சர்கமாவது ராமாயணம் பாராயணம் பண்ணவேண்டாமா? பெருமாளுக்குப் புஷ்ப கைங்கர்யம் செய்யவேண்டாமா? திருவாய்மொழி ஓத வேண்டாமா! இதெல்லாம் சொல்லவில்லையே!

கமலம்:—(சிரித்து) உன் வைஷ்ணவ ஸம்ப்ரதாயமெல்லாம் ஒரு பாட்டில் அடங்குமா? பாட்டி ... ... இந்தக் கவி உண்மையான தெய்வ பக்தனைப்பற்றி வர்ணிக்கிறார்.

சேஷி:—உண்மையான வைஷ்ணவன் குணக்கொழுந்துதான். அடுத்தபடி குப்பண்ணுதான். திருமண், கவசம், ராமஜபம், பாராயணம், திருவாராதனம் அணுத் தவறமாட்டான் குப்பண்ணு. குணக்கொழுந்தும் அப்படியே.

கமலம்:—உனக்குக் கொழுந்துப் பைத்தியம் முதிர்ந்து போனது.

சேஷி:—அவனைப்போலே பக்தி சிரத்தையாயிருந்தால் நாளைக்கே கிருத யுகம் வந்து வீட்டு வாசலில் நிற்குமே. இருக்கட்டும், இவ்வளவு சவரணையாகப் பாடும் நீங்கள் செய்வதெல்லாம் அனாசாரமாயிருக்கிறதே.

கோபாலன்:—என்ன அனாசாரம் பாட்டீ?

பங்கஜம்:—கிராமபோனுக்கு ஊசி வைத்தாயிற்று.

சேஷி:—ஒண்ணு, ரெண்டா! வைஷ்ணவன் மிலேச்ச பாஷை பேசலாமா? உடையவரும், தேசிகரும், நாதமுனிகளும் தஸ்பிஸ் என்று மிலேச்ச பாஷை பேசின

துண்டா? சட்டைபோட்டு மினுக்கலாமா? வைஷ்ணவன் வணக்க வொடுக்கமாய் வேஷ்டியை முழங் காலுக்கு மேலே கட்டிக்கொண்டு, "தாஸன், தொண்டன்" என்று பணிவாக வார்த்தை சொல்லவேணும். எச்சல் தீண்டல் பார்க்காதவன் வைஷ்ணவனு? கண்ட பேர் பார்த்துச் சாப்பிடுகிறவன் வைஷ்ணவனு? காப்பிக்கடைக்குப் போகிறவன் வைஷ்ணவனு? மோட்டார் சவாரி செய்கிறவன் வைஷ்ணவனு? பராழ்வார் சித்ரகூடத்திற்கு எம்பெருமானைப் பார்க்க மோட்டாரிலேதான் போனுரோ?

கோபாலன்:—பாட்டி, அந்தக்காலம் மலையேறிப் போனது. இப்போது மோட்டார் அவசியமாயிருக்கிறது.

சேஷி:—அந்தத் தகரப்பாடை வந்த பிறகு தான் பதிவ்ரதா தர்மம் குட்டிச்சுவரானது! பெண்டுகளுக்கு வாய் நீண்டது; கால் முளைத்தது! சகடாசுரன் மோட்டார் எமனுக வந்து குழந்தை குட்டிகளை நசுக்குகிறுன்.

கமலம்:—பாட்டி, ரயில்?

சேஷி:—ரயிலாலேதான் மூட்டைப்பூச்சி வலுத்தது; பதினெட்டுச் சாதியும் கலந்து வர்ணுஸ்ரம தர்மம் பாழானது!

பங்கஜம்:—ததாஸ்து! பாட்டி, உங்கள் விளக்கெண்ணெய்க் காலத்திலே இப்படி அழகிய மின்ஸார விளக்குண்டா? மண்ணெண்ணெயாவது உண்டா?

சேஷி:—இந்திரஜித்து மண்ணெண்ணெயால்தான் ஆபிசார ஹோமம் பண்ணினுன். அனுதிப்ளேக்குப்

பிணத்தை எரிக்கத்தான் அது உபயோகம். மண்ணெண்ணெய் நாற்றமும் புகையும் சகிக்காமல்தான் லக்ஷ்மிதேவி கோபித்துக்கொண்டு போய்விட்டாள்; கொல்லை வழியாக மூதேவி வீட்டில் புகுந்தாள்.

கமலம் :—பாட்டி, இப்போ மின்சார விளக்குத்தான் அதிகம்.

சேஷி :—ஆமா, தளுக்கு வைர நகை போட்டு, மின்ஸார வெளிச்சத்திலே மினுக்கிக் குலுக்கித்தான் கலிமாயை புருஷாள் மூளையைக் கலத்துப் பாழ்பண்ணுகிறது. அடி, கோயில் கர்பக்ருகத்திலே இந்த அனுசார விளக்கைப் போட்டிருக்கிறார்களே! தெய்வ ரகசியம் பாமரர்களைக் கண்டு ஓடிப்போகுமே!

(சீமான் வருதல்)

சீமான் :—கமலம், இன்றைக்கு அன்பு நிலைய டாக்கியில் கண்கொள்ளாக் காட்சி; இனிய பாட்டு, உயர்ந்த நடிப்பு, மேலான பொருள், கலைச்சுவை குலுங்குகிறது. கொச்சைப் பேச்சு கிடையாது. நல்ல தமிழ் அழகை உருக்கி வார்த்தது போலே காட்சிகள்.

(வேணு நண்பருடன் வருகிறான்)

சேஷி :—நீ போவையா! போவையா! அடியெடுத்துவை; காலை ஒடிக்கிறேன்! கன்யாப் பெண் லக்ஷணமாயிரு. இந்த எழவு தை சீக்கிரம் வரமாட்டேனென்கிறது. துரைமாதிரி பிள்ளையாண்டான் கிடைத்திருக்கிறான். இதற்குக் கால்கட்டு கட்டிப்போடவேண்டும். அடி, பெண்ணுன்னா புஸ்தகம் போல அடங்கி மடங்கி வீட்டிலேயிராதோ டீ, புருஷாளைக் கண்டால் வெட்கமாயிராதோடி!

சீமான் :—பாட்டிக்கு ஒரே பதில்; எல்லோரும் பாடுங்கள்.

உசேனி ராகம்-ரூபகதாளம்

('தில்லையம்பலத் தலமொன்றிருக்குதாம்' என்ற மெட்டு)

பழைய கிழவி—படுத்துத் தூங்குபோ
உன் காலமாச்சு
புதிய கோழி கூவுகின்றதே!
கால வெள்ளங் கரைபுரளுதே—
பழங் குப்பையெல்லாம்
ஓலமிட்டு வாரிப் போகுதே (பழைய)

சாதி பேதச் சனிய னொழியுதே
ஸமதர்ம மென்னும்
ஜோதி ஸூர்யன் உதயமாகுதே (பழைய கிழவி)

குருட்டுப் பழக்கம் குப்பை மேவுதே,
மதச் சண்டை யொழிந்தே—
இருட்டைப் பிளந்து ஞான மோங்குதே (பழைய)

அடிமைச் சங்கிலி யறுந்து போனதே,
இளம் பெண்கள் பட்ட
கொடுமை யொழிந்து மனங் குளிர்ந்ததே!
(பழைய)

சேஷி :—எல்லாப் படைகளும் சேர்ந்து எனக்குப் பாட்டு எட்டுக் கட்டியிருக்கிறதுகள்!

சீமான் :—இன்னுங்கேள்......

செல்லம் :—பங்கஜம், இங்கே சாப்பிடு. கமலம், சீமான், எல்லாரும் டாக்கி பார்க்கப் போகலாம்

(எல்லாரும் போதல்) (குணக்கொழுந்து வருதல்)

குண :—இந்தப் பங்கஜத்தை எப்படியடைவேன் ? ஆ! கோமதி கெட்டாள் ! இந்த உலகத்திலுள்ள பெண்களின் அழகெல்லாம் இவள் அழகின் கால் தூசி பெருது. பங்கஜம், பங்கஜம், உன்னையடைந்தால் போதும் ; எல்லா இன்பமும் பெற்றவனுவேன். அந்தக் கோபாலன் குறுக்கே நிற்கிருன். இருக்கட்டும் ஒரு நாள் தனியாக உன்னுடன் பேசுகிறேன் ! பங்கஜம்...

(போகிருன்)

---

## காட்சி 7

கமலம்—பங்கஜம்.

பங்கஜம் :—அவருக்கு எப்போதும் உன் நினைப்புத்தான் ?

கமலம் :—எனக்கும் எப்போதும் அவர் நினைப்புத்தான். பங்கஜம், என் கடிதத்திற்கு அவர் என்ன சொன்னுர் ?

பங்கஜம்:—காதல் காதலை யறிந்தது. கதை வளர்ப்பானேன். வேணு உனக்கு ; நீ வேணுவுக்கு. உன் காதலை அவருள்ளத்தில் செலுத்தி, இதோ ரசீது வாங்கி வந்திருக்கிறேன். விவரமாகப் பார்த்துக்கொள். நாளை வரும்போது பதில் எழுதிவை ; கொண்டு போகிறேன்.

கமலம் :—எனது காதல் வெற்றி பெற்றுல், உனது காதலும் ஜயம் பெறும்.

பங்கஜம் :—எங்கள் மனம் ஒத்திருக்கிறது. வேணு இருக்கிருன். நமது மனோரதம் நிறைவேறும்....

கமலம் :—பங்கஜம், இந்தப் பழங்கிழவியும், வைதீகத் தந்தையும் குறுக்கே விழுகிருர்களே !

பங்கஜம் :—அவர்களுக்கு மேலே தெய்வ சம்மதம் உள்ளது. பயப்படாதே...அச்சா, கல் பாஞ்ச் பஜே! நமஸ்தே.

கமலம் :—நமஸ்தே...

(பங்கஜம் போகிறாள்)

ஆ! இக்கடிதம் என்னைப் பரவசமாக்குகிறதே!

'என் கண்ணே, காதற்கனியே, உனது அழகல்ல, அறிவல்ல, அடக்கமல்ல; இவற்றையெல்லாம் தாண்டி உன்னுள் ஒரு தெய்வீகக் கனல் உள்ளது. அதன் சக்தி என் உயிர். என் எண்ணங்கள் உன்னால் நிறைவேற வேண்டும். உயிரே, நீயின்றி நானில்லை. கதிரின்றிக் கதிரவனில்லை. உன் மனம் என் மனம். உன்னுயிர் என்னுயிர். உன்னுடல் என்னுடல். உன் ஆன்மா என்னான்மா. உன் சுகதுக்கம் என் சுகதுக்கம். காதற்கனியே, உலகிற்கு நாம் தூய இல்லற வாழ்வை விளக்குவோம். நமது எண்ணங்கள் அதி சீக்கிரம் நிறைவேறும்.'

அன்பு வேணு.

ஆ! நானும் அவ்வாறே உணருகிறேன். இதோ பதில் எழுதுகிறேன்.

'நாதா, தாங்களின்றி நானில்லை; நான் உடல் தாங்கள் உயிர்; நான் வீணை, தாங்கள் பாட்டு; நான் விளக்கு, தாங்கள் சுடர்; நான் கண், தாங்கள் கதிர்; ஆருயிர்க்காதலரே, இருவரும் உள்ளே ஒன்று. குறுக்கே விழும் வைதீகத்தடைகள் ஒழிந்து, நமது விருப்பம் வெற்றி பெறுக.'

தங்கள் மனமே தன்மனமான காதலி...

(திரைக்குப் பின்னே குணக்கொழுந்து)

குணக் :—கமலம், வா இங்கே. பாட்டி கூப்பிடுகிருள்.

கமலம் :—என்ன கெடு பிடி! என்ன கொடுங்கோல்!

[கமலம் போகிருள்]

---

## காட்சி 8

சேஷி—குணக்கோழுந்து

சேஷி :—என்ன வயிற்றெரிச்சலைச் சொல்லுவேன்! ஒரு பல்லு விழவில்லை. நான் பழைய கிழவியாம்! என்னைப் போல் சீடை முறுக்கு யாரும் தின்ன முடியாது. இதுகளுக்கு முளைக்குமுன்னே பல்லு வலியும் பொய்ப் பல்லுமா யிருக்கிறது. என்னை நாப்புக் காட்டுறது களே! என்னேடே நடக்க முடியுமா? காரியம் செய்ய முடியுமா?

குணக் :—கலி முத்திப்போச்சுதம்மா! தாங்கள் பழைய கிழவியாம்! புதிய கோழி யார் தெரியுமா? வேணு...

சேஷி :—இருக்கட்டும்; அந்தப் புதிய கோழி கூவுவதைப் பார்ப்போம்; என்னெதிரே வந்தால் அவனுக்குப் பதில் சொல்லுவேன். இத்தனையும் அவன் போடும் தூபம்!

குணக் :—அம்மா, தங்களை ஸநாதான தேவியாகவே தாஸன் மதிக்கிருன்.

சேஷி :—என் பிள்ளை குப்பண்ணு; என்பேரன் நீ...... அப்பா, நானும் குப்பண்ணுவும் பண்ணின ராம ஜபத் தின் பலன்தான் பெருமாள் உன்னைக்கொண்டு விட் டார். காலம் தலை கீழே நடக்கிறது! நீதான் தலை

வணங்கி நடக்கிறாய். பக்தி, சிரத்தை, வணக்கவொடுக்கம், ஆசாரமெல்லாம் போச்சு!

குணக் :- போச்சுதம்மா போச்சுது! இந்தக் குட்டிகள் பெரியவாள் பேச்சைக் கேட்காமல் நேற்றுப்பிறந்த அந்த வேணு, கோபாலன் கும்பலோடு சேர்ந்து கெட்டுப்போகின்றன. அம்மா, கமலியைக் காப்பற்ற வேண்டும். ஸ்ரீவத்ஸ கோத்திரத்திலே பிறந்த குப்பண்ணுச்சாரி வீட்டுக் கன்னிகை மீடிங்குக்குப் போகிறதும், சமபந்தி சாப்பிடுகிறதும், ஆசார விவகாரமில்லாமல் திரிகிறதும் நன்றாயில்லை.

சேஷி :—இல்லையப்பா இல்லை. அந்தக் குட்டிக்குக் கொடுத்து வைக்கவேண்டும். தங்கம்போலே உனக்கு அதைக் சட்டிக் கண்ணாலே பார்க்கவேண்டும். ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி... தை......ஆறு மாதம் ஆறுயுகமா யிருக்கிறது.

குணக் :—அம்மா சொல்லுவது அமிர்த சஞ்ஜீவி. ஆனால், எனக்கு ஆசார விவகாரமெல்லாம் நறுக்காக இருக்க வேணும். என் மனசுப்படி இப்போதே அந்தக் குட்டியைப் பழக்கவேண்டும்.

சேஷி :—முதலில் அந்தக்குட்டியை வேணு மூஞ்சியிலே முழிக்காது செய்யவேண்டும்.

குணக் :—அதுதான் தாசன் சொல்லவந்தது. அம்மா, இவர்களுக்குத் தூது அந்த மூளையிலே அறுத்த பங்கஜம். அவள் மூலமாக இரண்டு பேருக்கும் கடிதப் போக்கு வரத்தெல்லாம் நடக்கிறது. இந்தப் பங்கஜம் நடத்தை எனக்குப் பிடிக்கவில்லை. கோபாலனை ......வலை.

சேஷி :—ஆ! அப்படியா! அந்தக் கோபாலன், ப்ரம்மச் சாரிக் கட்டை ......

குணக் :—அம்மா, இந்தக் கோபாலன் பண்ணும் திரிசமன் கொஞ்சமல்ல; வேணு பல்லவி ; இவன் அனுபல்லவி; நம்மவீட்டுக் குட்டிகள் சரணம்; இதெல்லாம் வந்தது...

சேஷி :—எல்லாம் அந்த அனுசாரப் படிப்பினால் தான். மகிளாமந்திரம் என்று ஒன்று ஏற்படுத்திப் பெண்களை அடங்காப்பிடாரியாக்கி விட்டார்கள் அந்த வேணுவும் இந்தப் பங்கியும்!

குணக் :—அம்மாள் தீர்க்கதரிசி ; விசை அதிலேதான் இருக் கிறது. நாலெழுத்து இங்கிலீஷ் தெரிந்ததும் மூக்குக் கண்ணாடிபோட்டு முறைத்துப் பார்க்கிறார்கள். சாதி மத ஆசாரம் நாசம்!

சேஷி :—போச்சப்பா, நாசமாய்ப்போச்சு! குணம், இந்தக் குட்டியாவது உருப்படவேண்டும்.

குணக் :—பள்ளிக்கூடத்திற்குப் போகிறமட்டிலே உருப் படாள்; பள்ளிக்கூடச் சாக்கை வைத்து அந்த முன் னேற்றச் சங்கத்திற்குப் போகிறாள். அங்கே என் னென்ன விபரீதம் நடக்கிறதோ!

சேஷி :—ஹரி ஹரி, ராம ராம, வாசுதேவ! அந்தச் சங்கந் தான் கலி புருஷன் அழிமாளிகை. குணம், நீ சொல் லும் காரணந்தான் சரி. இதோ போகிறேன் குப் பண்ணுவிடம். அவன் பணந்தானே செலவழிகிறது. மாதம் ஐந்து, பத்து வீண் தண்டம்! நாளை முதல் இந்தக் குட்டி பள்ளிக்கூடம் போகக்கூடாது ; அந்தப் பங்கஜம், கோபாலன், வேணு, யாரும் இங்கே எட்டிப்

பார்க்கக்கூடாது. திண்ணையிலே ராம ஜபம் பண்ணிக் கொண்டு உஷாராயிருக்கிறேன்; உள்ளே வரச் சரிப் படாது என்கிறேன். குணம், நீ பயப்பட வேண் டாம்.

குணக் :—தாயார் இருக்கையில் தாஸனுக்குப் பயமேது? ஆனால், துணிச்சலெடுத்த குட்டி அடங்குமா? தாயும் அவள் பக்கம்.

சேஷி :—தூணிலே கட்டிப்போட்டுத் தாலி கட்டிவிடு வோம். பிறகு என்ன செய்ய முடியும்? குணம், அந்தச் செல்லத்திற்கு நீ கொஞ்சம் சொல்லு.

குணக் :—ஆஹா, தாஸனால் ஆன கைங்கர்யம் செய்கிறேன். பிறகு நடப்பது எம்பெருமான் திருலீலை.

சேஷி :—எனக்கொரு பேரன் வாய்த்ததே... அந்தத் தர ...தலை...சீமான் அதிகப் பிரசங்கி.

குணக் :—அவனைக்கண்டால் தாஸனுக்கு எங்கேயோ பற்றியெரிகிறது! அவன் பூஜையறைக்கு வந்தால் பெருமாள் வீட்டை விட்டுக் காத வழி ஓடிப்போவார். அவன் அனுசாரக் களஞ்சியம்.

சேஷி :—ஆமப்பா ஆமாம். எங்கேயோ காந்த விளக்கிலே திரைபோட்டுக் கூத்தாடுகிறானும். எல்லாரையும் இழுத்துக் கொண்டு போயிருக்கிறான்.

குணக் :—அதுவும் எம்பெருமான் திருலீலை. நிம்மதியாகக் குப்பண்ணாவைப் பார்த்துப் பேசச் சரியான சந்தர்ப் பம். தாயார் எளட்டும். தாஸன் பெருமாள் சேவைக்குப் போகிறேன். நாராயண! நாராயண!

(போகிறான்)

சேஷி:—இதோ குப்பண்ணுவுக்குப் புத்தி சொல்லுகிறேன். (போகிறாள்)

---

## காட்சி 9

குப்:—குணம், ராம நாமமே கற்கண்டு.

குணக்:—கற்கண்டு கெட்டதே; குல்ஹந்து என்று சொல் லட்டும்.

(ஒரு பாகவதர் வருதல்)

(பாகவதர்) ராமநாமைவ நாமைவ
நாமைவ மம ஜீவனம்
கலௌ நாஸ்த்யைவ நாஸ்த்யைவ
நாஸ்த்யைவ கதிரன்யதா!
ஓம்ராம் ஸ்ரீராம் ஜயஜயராம்!

குப்:—நமோநம: எளணும், பாகவதாள். இப்படி எழுட்டும்; தாஸன் க்ருதார்த்தனானேன்.

பாக:—நமோ நாராயணாய! ராம்! ராம்!

குப்:—ராமா! ராமா! பத்ராஜலம் ராமதாஸனுக்குச் சேவை தந்தாற்போலே, பல விதமாக நீ வருகிறாய்! ராம் ராம், குணக் கொழுந்து, பாகவதாளுக்குத் தாக சாந்திக்கு ஏதாயினும் கொண்டுவா.

குணக்:—திருப்தியாகக் கொண்டு வருகிறேன். திருவுளத் திலே என்ன அபேக்ஷையோ கேட்கலாம்.

(குணக்கொழுந்து உள்ளேபோய் வெள்ளிச்செம்பில் தீர்த்தம், தட்டில் லட்டு, விசிறி எல்லாம் கொண்டு வருகிறான்.)

தேவாள் ஸ்வீகரிக்கட்டும்; தாஸன் சேவையை அங்கீ கரிக்கட்டும்.

பாக :—ஓம், ராம், ஸ்ரீராம் (சாப்பிடுகிறார்; குணக்கொழுந்து விசிறி போடுகிறான்.)

குணக் :—திருவுளத்திற்குக் கிஞ்சித் புளியோதரை அபே க்ஷையிருந்தால் தாஸன் இதோ கொண்டு வருகிறேன்.

பாக :—ஹேவ்! எல்லாம் சந்துஷ்டி. அமிசயித்துத்தான் வந்தது. சந்தோஷம்.

குப் :— ராமாய ராமபத்ராய
ராமசந்த்ராய வேதஸே
ரகு நாதாய நாதாய
ஸீதாயாப்பதயே நம:

எங்கும் ராமன், எல்லாம் ராமன். பரம ராம பக்தாளை இன்று தாஸன் கண்டது பூர்வ புண்யத்தினாலேதான். தேவாள் திவ்யதேசம் எவ்விடமோ? திருநாமம் ஏதோ? தாஸனால் ஆகக்கூடியது ஏதேனும் உண்டானால்......

பாக :—தேவாளைப்பற்றிப் ப்ரக்யாதியாகக் கேள்விப்பட் டிருக்கிறேன். பரம பக்த சிகாமணி, ராம தாரக மந்த்ரம் தினம் பதினாயிரம் ஜபித்து வருவதாகவும் பிரசித்தி. பாகவத பக்த பகவான்!

குப் :—எல்லாம் ரகுவரன் திருவுளம். தேவாள் க்ஷேத் ராடனம் செய்யப்புறப்பட்டதோ?

பாக :—தாஸன் பன்னிரண்டு வருஷமாக ஒரு கைங்கர்யத் திலே ஈடுபட்டுளேன். எம்பெருமான் திருவுளத்தினால் பாதி நிறைவேறியது.

குப் :—கோவில் கைங்கர்யமா? எவ்விடத்திலோ?

பாக:—முக்கொம்புக்கருகே எழி யிருக்கும் குணசேக ரப் பெருமாள் மஹா வரப்ரசாதி; தீராத நோயெல் லாம் தீர்த்து வைப்பவர். பைத்தியம் சைத்தியமெல் லாம் பெருமாள் சந்நிதானத்திலே படாபஞ்சனம். ஆலயம் கொஞ்சம் கிலமாகிவிட்டது. அதைப் புது சாகவே கட்டப் பிரயத்தனப்பட்டுக் கர்பக்ருஹமும் முதல் ப்ராகாரமும் திருவுளத்தால் முடிந்தது. மடப் பள்ளி, கருட மண்டபம், உடையவர் சந்நிதி, தாயார் சந்நிதி, சடகோபருக்கு ஆலயம், ஆஞ்சனேயருக்கு ஒன்று...பாகவதாள் வரப்போக இருக்க வைக்க ஒரு திருமடம், புஷ்ப கைங்கர்யத்திற்காக ஒரு நந்தவனம், இவ்வளவும் ஆனபின்பு, கும்பாபிஷேகம் நிறைவேற வேண்டும். தேவாளைப்போலப் பரம பாகவதாள் உதவி யால்தான் இதுவரையில் கைங்கர்யம் நடந்தது. ஏதோ சிறு துளி பெரு வெள்ளம். இப்படித் திவ்ய தேசங்களைப் பார்த்துக்கொண்டு அங்கங்குப் பஜனை செய்து, பக்தாள் உபகரித்ததை வாங்கிப் பகவத் கைங் கர்யம் நடக்கிறது. மதுரை, அயோத்தி, த்வாரகை, ப்ருந்தாவனம், பத்ரி நாராயணம், பஞ்சவடி, சித்ர கூடம், பத்ராசலம், திருப்பதி, காஞ்சி, குருகூர், திருக்கோட்டியூர், திருப்புல்லாணி முதலிய எல்லாத் திவ்ய க்ஷேத்ரங்களையும் சேவித்துத் தாஸன் தேவாளை நாடிவந்தேன். இது ஸ்ரீரங்கநாதன் ப்ரசாதம். தேவாள் அங்கீகரிக்கட்டும்.

[துளசி தருகிறார்]

குப் :—அஹோ பாக்யம்! அஹோ பாக்கியம்! ராம ராம! கேட்கக் கேட்க ரம்யமா யிருக்கிறது. மஹத் கைங்கர்

யம்! தாஸனுல் தர முடிந்ததைத் தேவாள் அங்கீகரித்து, பகவத் கைங்கர்யத்திற்கு நிவேதிக்கவும். (தனித்து) குணம், இந்தா சாவி, என்ன தரலாம்?

குணக் :—இவ்வளவு திவ்ய தேசங்களைச் சேவித்துப் பெருமாள் கைங்கர்யம் செய்யும் பாகவதாளுக்கு ஒருபை (ரூ 500) பெரிதல்ல. பிறகு அப்பா இச்சை.

குப் :—அது உசிதம்; இந்தா எடுத்துக் கொடுத்துத் தேவாளை வழியனுப்பு.

குணக் :—தாசன்! பெருமாள் பின்னுலே வரட்டும்! (மனத்துள்) 500-என்றுல் நமக்குக் கமிஷன் 300 அல்லவா!... குப்பண்ணு பணத்தில் 60% நமக்குத் தானே? ஆம்!......

[மரியாதையாகப் பாகவதரை யழைத்துச் செல்லுகிறுன்]

குப் :—(சோபாவில் சாய்ந்து ராமஜபம் பண்ணுகிறுர்.)

ராம ராம...லீலாப்ரபஞ்சம்...அவனிச்சை நடக்கிறது ...ராம ராம...அவனின்றி அணுவும் அசையுமா... அசையுமா...நடக்குமா...நடவாது...ராம ராம.

இல்லதும் உள்ளதும் அல்லதும் அவனுரு;
எல்லையில் அந்நலம் புல்கு பற்றற்றே.

ராம ராம...வாஸ்தவம்...ராமனுண்டு நாமுண்டு... இகத்திலே பக்தி...பரத்திலே முக்தி...ராம...ராம.

"அற்றது பற்றெனில் உற்றது வீடு"

வாஸ்தவம்...பற்றை ஒழித்துத் தலைமுழுகவேண்டும் ...பரலோக யாத்திரை போகும் வழியிலே இது ஒரு மண்டபம்...எத்தனைக் கூத்துக்கள் இங்கே...ஸ்ரீராம்—ஜய

ராம்...எல்லாம் ஒட்டாது. பார்ப்போம்...ராம்...ராம்... என்றால் மனது சும்மா இருக்கிறதா?...ராம, ராம, அபிமானம் வந்து வந்து இழவு கொடுக்கிறதே!...ராம ராம.

உள்ளம் உரை செயல் உள்ள இம்மூன்றையும்
உள்ளிக் கெடுத்து, இறையுள்ளிலொடுங்கே!

வாஸ்தவம்...ராம ராம....மனம் ஒடுங்கவில்லையே...ராம ராம...இளையாள்...நாசூக்குக்காரி...படித்தவள்...புத்திசாலி ...ராம ராம...பயமாயிருக்கிறது...பிள்ளைகள் அவள் கட்சி. ...ஊரெல்லாம் சிநேகிதம்...ராம ராம...அம்மாளுக்கும் இவர்களுக்கும் ஏழாம்பொருத்தம்......ராம ராம......வீட்டிலே சண்டை...ராம நாமம் எனக்குக் கற்கண்டு...இவர்களுக்கு வேப்பிலை...அம்மாள் சொல்லுவது சரிதான்...ராம ...அனுசாரப் படிப்பினால் வந்த கேடுதான்...கமலியை வீட்டில் அடைத்துக் கண்டிக்கவேண்டும்...ராம...இனிச் சம்பளம் தரமுடியாது...ராம...படித்துக் கெட்டது போதும்... ராம ராம...குணக்கொழுந்து நல்ல பிள்ளை... ..தை பிறக்கட்டும்.

(கமலம் வருதல்)

கமலம் :—அப்பா....

குப் :—ராம ராம...இந்த வருஷம் வியாபார மந்தம்...ராம, ராம, நெல் விலை போகவில்லை.

கமலம் :— அப்பா...அப்பா

குப் :—திடீரென்று முகூர்த்தம் வைத்தால் பணம்?...ராம ராம...இரண்டு வட்டிக்கு வாங்கித்தான் ஆகவேண்டும்.

கமலம் :—அப்பா...நான் வந்திருக்கிறேன்.

குப் :—நில்லடி ...சம்சாரமும் சரி, மூட்டைப்பூச்சியும் சரி, 1008 ராமநாமம் ஆகவில்லை, அதற்குள்ளே....

கமலம் :—அப்பா, அவசரம்.

குப் :—சொல்லித் தொலை.

கமலம் :—பரிட்சைக்கு உடனே பணங் கட்டவேணும். நான் முதலில் தேறுவேன். ரூ. 15 வேணும்.

குப் :—நீ படித்தது போதும். இனிப் படித்தால் அபாயம்.

கமலம் :—அப்பா, பெண்டுகள் படிக்கக் கூடாதா ?

குப் :—படித்தால்தான் பிரசங்கம் செய்யக் கிளம்பி விடுகிறார்களே! குலாசாரம் கெட்டுப் போகிறது.

கமலம் :—பெண்டுகள் பேசக்கூடாதா ?

குப் :—சித்திரப் பாவைபோல அடங்கி ஒடுங்கி யிருக்க வேணும்.

கமலம் :—நாங்கள் உயிரில்லாச் சித்திரமா ? வாயில்லாப் பொம்மையா ?

குப் :—சொன்னபடி கேட்கவேண்டும். மூத்தோர் சொல் வார்த்தை அமுதம்.

கமலம் :—நான் படிக்கத்தான் போகிறேன்.

குப் :—படித்தால் பயபக்தி குலதர்மமெல்லாம் போய்விடும்.

கமலம் :—அது சுத்தப்பொய். பழம்பாட்டியின் மயக்கம்.

(சேஷி வருதல்)

சேஷி :—திரிசமனைப்பாரு! திரிசமனே! குப்பண்ணா, இந்தக் கமலியை வெளியே விடாதே. அடி குட்டி., சின்னஞ்

சிறிசு லக்ஷணமாயிரு. காயிதம் எழுதுகிருயாமே அவனுக்கு! கையை ஒடித்து மடமடன்னு எரிக்கவா! வரட்டும் அந்த விசுக்கான் சிமான். அவன் உனக்குத் தூது!

குப் :—பார்த்தாயா! பாட்டி கோபித்துக் கொள்ளுகிருள். பெரியோர் மனம் நோகலாமா? காலிலே விழுந்து, க்ஷமிக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்.

கமலி:—அப்பா, பாட்டி காலம் மலையேறிப்போயிற்று. இது புது யுகம்.

சேஷி :—என்னத்தைச் சொல்லுவேன்! அந்த வேணு போலே பேசுகிருளே. அடி பேத்...தீ...பே...த்...தீ வா, உன்னைச் சொல்லுகிறேன். குப்பண்ணு, கொம்பு மாதிரி பெண்ணை வளர்த்துத் தன்னரசு நாடாக விடுகிருயே! இதற்குக் கல்யாணம் கல்லெடுப்பு வேண்டாமா? கட்டிப்போட வேண்டுமப்பா!

கமல :—உ உம்! எனக்குக் கலியாணம் வேண்டாம். படிக்கத்தான் போகிறேன்.

சேஷி :—அடி செருப்பாலே; படிப்பாம்! படிப்பு. கொம்பேரிமூக்கன் மாதிரி வயசாச்சு. நாலு வருஷத்திற்கு முன்னுலே தாலிகட்டி யிருப்போம். இந்தப் பங்கியும், அந்தக் கோபாலனும்,வேணுவோடே சேர்ந்து, ஊரைக் கலக்கி, கச்சேரியிலே பேசி,'சாரதா பில்லாம்' திரிசமன் பண்ணிவிட்டார்கள்! பெண்டுகள் லட்சணமாயில்லை. துரைகளோடே பேசி, சட்ட சபையிலே எதிர்ப்பாளையம் போட்டுப் பிடித்ததைச் சாதித்து விட்டார்கள்! எல்லாம் அந்த வேணு ஊதிவிட்ட நெருப்பு! சாதி, ஆசாரம் பஞ்சாய்ப் பறக்கிறது!

கமல :—பாட்டி, விவரம் தெரிந்து ஒருவரை யொருவர் அறிந்து, மனமொப்பி வாழக்கூடாதா! அப்பா, பெண்கள் விழித்துக்கொண்டோம். இனி அடிமை போலே வாழோம். ஆண், பெண் சேர்ந்தே மானிடம். பொன்னும் நகையும்போலே, சூரியனிற் கலந்த சூடும் ஒளியும்போலே இருவரும் ஒன்றுபட்டு வாழ்வோம்.

சேஷி :—ஐயையோ! காலம் கெட்டுப்போச்சு!

[செல்லம் வருதல்]

பரிந்துபேச வக்கீல் இதோ.....

செல் :—நாதா...

குப் :—ராம-ராம...சொல்லு.

செல் :—கமலிக்கு ரூ. 15 தந்து பள்ளிக்கூடத்திற்கு அனுப்புங்கள்.

குப் :—மாமியாரைக் கேளு.

செல் :—எனக்கு உங்களைக் கேட்கத்தான் உரிமையுண்டு.

குப் :—லோக விவகாரம் என் காதிலே போடவேண்டாம்.

செல் :—குடும்பம் எப்படி நடக்கும்?

குப் :—அவன் திருவுளப்படி நடக்கும்?

செல் :—இன்று மாதாந்திரச் சாமான் வேண்டுமே...

குப் :—குணக்கொழுந்திடம் ஜாப்தாக் கொடு. ராம...ராம...

செல் :—இதோ, என்னைப் பார்த்துப் பேச வேண்டும். இது தங்கள் வீடு. நான், தங்கள் ஸஹதர்மசாரிணி; தங்களில் பாதி. வீடு நமது; நேற்றுவந்து அண்டிய குணக்கொழுந்தின் கார்பாரிலா நான் இருப்பது? இது தர்மமா? நாம் பெற்ற செல்வம் கமலம்; நல்ல

புத்திசாலி. அவளுக்குக் கல்வி தருவது நமது கடமை. அறிவு ஒன்றுதான். ஆண்கள் போலவே பெண்களும் கற்பது கடமை.

சேஷி:—விண்ணுணம் பேசுகிருயே! ராமாயணத்திலே, ராமர் வனவாசம் போகையிலே, சீதை என்ன சொன்னுள்? “பதிர்ஹி தேவதா நார்யா; பதிர்பந்து. பதிர் குரு:” என்ருளே. தெரியவில்லையா? இந்தக் காலத்துப் பெண்டுகள் கண்ட நாவலெல்லாம் படித்து ராமாயணத்தைத் தொடுவதில்லை.

செல்:—தெரிகிறது; ராமர் ராமராஞல், சீதை சீதையா யிருப்பாள். இந்த லீலாப்ரபஞ்சத்திலே நடக்கிறது நடக்கட்டும் என்று சிதையை ராமர் அலட்சியம் செய்தாரா? சீதையை மீட்கத்தானே இலங்கைக்குப் போய் யுத்தம் செய்தார்; மனைவிக்குச் செய்யவேண்டிய கடனை வீரமுடன் செய்தார். இங்கே நான் ஏதாவது கேட்டால் குணக்கொழுந்திடம் கைகாட்டுகிருர். இந்த வீட்டு எஜமான் குணக்கொழுந்தா? நேற்று வந்தவன் இன்று அதிகாரம் செலுத்துவதென்ருல் யாருக்குப் பொறுக்கும்? எவ்வளவோ பொறுமையுடன் நடந்து கொள்ளுகிறேன். ஏதோ விலைக்கு வாங்கி வந்த மாடு மாதிரி நடத்துகிறீர்களே.

குப்:—சரி, பிரசங்கத்திற்குக் கிளம்பிவிட்டாள். இவளுக் குத் துணிச்சல் அதிகம். இணங்கிப்போவோம்.... ராம ராம. செல்லம், இரு, ஜபத்தை முடித்து வரு கிறேன்.

செல்:—எங்களுக்கும் தெய்வம், பக்தி, தர்மம், ஆசாரம் உண்டு. பகவான் உயிர்க்குயிராக ஆன்ம வடிவாக ஒவ்

வொருவர் இதயத்திலும் விளங்குகிருர். மனங் குவிந்து தினம் ஒரு மணி நேரம் நிம்மதியாக ஆத்ம பாவனை செய்துவந்தால் போதும்; நாளடைவில் தன்னைக் காணலாம்; சாந்தமுண்டாகும்.

குப் :—அது அத்வைதம்; நான் பாஞ்சராத்திரி; ப்ரபத்தி மார்க்கமே எனக்குச் சுகம்......

செல் :—உள்ளுணர்வால்தான் ஆத்மா புலனுகும். ஆண், பெண் இருவருக்கும் ஆத்மா ஒன்று. இரண்டு பேரும் ராதாகிருஷ்ணன் அல்லது அர்த்தநாரீசன் போலே ஒன்று. ஆண் அறிவு; பெண் அன்பு, ஆண் அமைதி; பெண் இன்பம், அழகு. ஆணும் பெண்ணும், புத்தியும் இதயமும் போலே. இருவர் இன்பக்கலப்புத்தான் உலகம். வாழத் தெரிந்தால், மனையே முக்தி.

குப் :—செல்லம், நான் பக்தி செய்யவில்லையா ?

செல் :—நன்ருயிருக்கிறது பக்தி; அகம் கொள்ளை போகிறது; அதுவும் பெருமாள் லீலை யென்ருணும்! அந்த ஆஷாடபூதியின் வாலைப்பிடித்து ஆடுவதும், ஹாஹூ என்று குதிப்பதும், அவன் இஷ்டப்படி விதவிதமாகத் தளிகை பண்ணி வாசுதேவன் பெயரால் வயிற்றை நிரப்புவதும், போலியாசாரமும்......நன்ருயிருக்கிறது. ஊர் சிரிக்கிறது. பக்தி செய்யுங்கள். அதற்கு இந்த ஆர்பாட்டம் வேண்டாம். நாங்களெல்லாம் சங்கத்திலே பக்தி த்யானம் செய்கிருேம். எத்தனையோ பெரியவர்கள் தியான மந்திரத்திற்கு வருகின்றனர். ஒரு நாள் வந்து பாருங்கள் அங்கு விளங்கும் சாந்தத்தை......

சேஷி :—ஆம்படையானுக்குப் புத்தி சொல்லுகிருயா? பாரேன் துணிச்சலை! கல்லுப்போலே மாமியார் இருக்கிறேன். என்னெதிரே அகத்துக்காரருடன் சரிசமனுக வக்கீல் போலே எதிராடுகிருளே!

சேல் :—மாமி, அவர் என் உயிர், நான் அவர் பாதி; ஒருவருக்கொருவர் விட்டுப் பேசி நியாயம் சொல்ல உரிமையுண்டு. தயவு செய்து தாங்கள் குறுக்கே வரவேண்டாம். இது எங்களிருவர் விஷயம்.

குப் :—(மனதுள்) இவள் தகப்பனுர் வக்கீல்; அவரைப் போலவே பேசுகிருள், ராம ராம; என்ன பதில் சொல்லுவது.......? இணங்கித்தான் போவோம். அம்மா, நீ கமலத்தைக் கூட்டிக்கொண்டு அப்படிப்போயிரு.

சேஷி :—ஆமடாப்பா, நான் ஒரு கிழவி யிருப்பதுதான் எல்லார் கண்ணிலேயும் உறுத்துகிறது. தொலைந்து போகிறேன்—வாடி கமலி.

[இருவரும் போதல்]

சேல் :—நாதா, தங்களை என் உயிர்போல நேசிக்கிறேன்.

குப் :—அது நியாயம். எனக்கும் தாரேஷணை பலமாகத்தான் இருக்கிறது. என்ன வேண்டும் சொல்லு?

சேல் :—முதலில் கமலத்திற்கு ரூ. 15 தந்து பள்ளிக்கூடத்திற்கு அனுப்புங்கள். குழந்தை நன்ருகப் படிக்கட்டும்.

குப் :—அது சரி. இந்தா சாவி, பெட்டகத்தைத் திறந்து எடுத்துக் கொள்.

சேல் :—அத்தான் கொள்ளைச் சமத்து; இப்போது நல்ல புத்தி வந்து விட்டது.

குப் :— அடி சகி, உன் மேல் கொள்ளைப் பிரியம்.

செல் :—அத்தான் கொள்ளைச் சமத்து; இருக்கட்டும். இதெல்லாம் என்ன வேஷம்?

குப் :—நான் ஸ்ரீ வைஷ்ணவன்; அதற்குத் தக்கபடி ஆசாரம் வேண்டாமா?

செல் :—ஆசாரம் வேண்டியதுதான். தேக சுத்தி, குளிப்பு, துவைப்பு, சுசிருசியான நல்லுணவு, நல்ல நூல்களைப் படித்தல், நல்லோர் கூட்டம், பக்தி, சிரத்தை, தியானம் இதெல்லாம் ஆசாரந்தான்.

குப் :—கண்ணே, நீ மிகவும் புத்திசாலி.

செல் :—முன்னேற்றச் சங்கத்திலும், மகிளாமந்திரத்திலும் இதெல்லாம் செய்கிறோம். ஆனால் வெளி வேஷங்களிலும், ஆர்பாட்டங்களிலும் எங்களுக்கு நம்பிக்கை கிடையாது. அந்த ஆஷாடபூதியோடத் திங்கு திங்கென்று குதித்தால்தான் சாமி வருமா? இனிமேல் வீட்டை வாசலைக் கவனித்துச் சுய புத்தியுடனிருங்கள். இதோ நான் கமலியைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வருகிறேன்.

[போகிறாள்]

குப் :—ஒரு கண்டம் தப்பியது! ராம......ராம......

---

## காட்சி 10

[சேஷிப் பாட்டி கமலத்திற்கு புத்திமதி சொல்கிருள்.]

கமலம் :—பாட்டி, பெண்டுகள், தடி மூங்கிலா, யந்திர பொம்மையா, சந்தை மாடா? அவர்களுக்கு மனச் சாட்சி யில்லையா?

சேஷி :—கேளடி அதிகப்ரசங்கி; நான் பெரியவள். எதிர் பேசாதே. உன்னை நல்ல வழியிலே கொண்டு போகிறேன்.

கமலம் :—என்ன வழி, பாட்டி?

சேஷி :—அப்படிக் கேளு, என் கண்ணு, என் தங்கக் குஞ்சலம், முத்துக்குட்டி. நான் சொன்னபடி கேட்டால் தலையிலே வைத்துக் கூத்தாடுவேனே.

கமலம் :—சொல்லு.

சேஷி :—உனக்குத் தை மாசம் கல்யாணம்.

கமலம் :—வேண்டாம்.

சேஷி :—தங்கம் போலே மாப்பிள்ளை, குணக்கொழுந்து.

கமலம் :—வேண்டவே வேண்டாம்.

சேஷி :—இந்தப் படிப்புத் தடிப்பெல்லாம் விட்டுடு.

கமலம் :—மாட்டேன்.

சேஷி :—அந்த வேணுவை மறந்துவிடு.

கமலம் :—மாட்டேன்.

சேஷி :—குணக்கொழுந்து கொடைப் பணக்காரன்; ஸ்ரீ வைஷ்ணவ ரத்னம்; உன் அதிட்டந்தான் இங்கு

அவனை வரவழைத்தது. தை மாதம் மணையிலே அமர்த்தி, இரண்டு பேரும் பூலா செண்டாடிப் பார்க்க வேணும்.

கமலம் :—நான் மாட்டேன். நீ பண்ணிக் கொண்டு, அந்த உலக்கைக் கொழுந்தோடே பூலாச் செண்டாடு.

சேஷி :—சீ அசடே, அப்படியா சொல்லுவாள். தங்கக் கம்பி ; எலுமிச்சம் பழமின்னுப் பழம் ; திடசாலி ; சந்தி ஜபம், பாராயணம், ஆசார விவகாரம் அணுத் தவறமாட்டான். நாலுந் தெரிந்தவன்.

கமலம் :—எனக்குக் கலியாணம் வேண்டாம்.

சேஷி :—கலியாணம் பண்ணிக்கொண்டு ஆம்படியானே கதி, தெய்வம் என்று வாழுவதுதான் பெண்ணுக்கு முக்தி. பெண்ணு லக்ஷணமாயிரு.

கமலம் :—பெண் லக்ஷணம் என்ன பாட்டீ ?

சேஷி :—அப்படிக் கேளு சமத்து ; பெரியவாள் சொன்ன படி நடக்கவேணும் ; எதிர் பேசக் கூடாது ; அடங்கி யொடுங்கிச் சித்திரப் பாவைபோல இருக்கவேணும் ; இடுப்பு வளைந்து காரியம் செய்யவேணும் ; புருஷாளைக் கண்டால் நாணித் தலை குனிந்து உள்ளே ஓடிப் போக வேணும் ; நான் சொன்ன கணவனுக்கு வாழ்க்கைப் படவேணும்; பதியே தெய்வம் என்று வாழவேணும்; கணவனைத் தவிர வேறு புருஷாளைத் தலை நிமிர்ந்து பார்க்கக் கூடாது; கணவனுக்குத் தினம் பாதபூசை பண்ணி ஸ்ரீபாத தீர்த்தம் 5 தடவை ஆசமன்யம் பண்ணவேணும்; கணவனுக்காகத்தான் அழகு செய்து கொள்ளவேணும்; இந்தக் காலத்து மின்னு மினுக்கி

களைப்போலே யிருக்கக்கூடாது; மாமியார், நாத்தனார் எது சொன்னாலும் பொறுமையா யிருந்து அடங்கி நடக்கவேணும்; புருஷன் வந்தால் எழுந்து நிற்க வேணும்; வா என்றால் வரவேணும்; போ என்றால் போகவேணும்; அடுப்பங்கரைதான் பெண்டுகளுக்குப் பள்ளிக்கூடம்; சுசி ருசியாகத் தளிகை பண்ணவேணும்; தளிகை, பதி சேவை, சந்தான விருத்தி—இதற்குத் தான்பெண் பிறந்தது; கணவனை விட்டு இணை பிரியக் கூடாது; புருஷாளைப் போலே மேடையிலே பேசுவதும், காயிதம் எழுதுவதும் கற்புடைய பத்தினிக்கு அழகில்லை; என்னைப் போலே யிருக்கவேணும்.

கமலம் :—நானும் பாட்டியா, உன்னைப் போலிருக்க?...... இதெல்லாம் எங்கள் பாட்டி உபதேசம் என்று எழுதி, முன்னேற்றச் சங்கத்தில் ஓட்டுக்கு விடுகிறேன்.

[செல்லம் வருதல்]

செல்லம் :—போதுமடீ உபதேசம்; கமலீ, வா இங்கே; டெலிபோனிலே பேசு. ப்ரின்ஸிபால் கூப்பிடுகிறார். வா.

[இருவரும் செல்லல்]

---

## காட்சி 11

சேல் :—ஹல்லோ......ப்ரின்ஸிபாலா—முடிவில் தகப்பனார் சம்மதித்தார். கமலம் பணங்கொண்டு இதோ வருகிறாள். Thanks. கமலம், பேசு.

கமலம் :—Sir, Mother has given me the fees. I come at once. Thanks.

சேல் :—வா, மோடார் தயாராயிருக்கிறது. நான் சங்கத்திற்குப் போகிறேன். நீ பள்ளிக்கூடம் போ. பெண்கள் ஆடு மாடல்ல; பகுத்தறிவுள்ள உயிர் என்று காட்டுவோம்.

[போதல்]

---

## காட்சி 12

குப்பண்ணு—குணக்கொழுந்து

[குப்பண்ணு, சேஷியின் யோசனைப்படிக் கமலத்தைக் குணக்கொழுந்திற்குத் தந்து, பாதி ஆஸ்தியை எழுதிவைப்பதாக முடிவுசெய்கிறான். இருவரும் வெகு விரைவாக ஜபமாலையை உருட்டிக் கொண்டு இருக்கிறார்கள்.]

குப் :—ராம...ராம...அப்படியிருக்கிறது உலகம். என்னை அவள் அடக்குகிறாள்; நான்தான் அடங்கிப் போக வேண்டியிருக்கிறது. வீடு தன்னரசு நாடு.

குணக் :—நான் சரிப்படுத்துகிறேன். அப்பாவுக்குக் கவலை வேண்டாம்.

குப் :—என் மனத்துக்குத் தக்க மனையாக்க வேண்டும்.

குணக் :—தாஸன் இருக்கிறேன்.

குப் :—நீதான் எனக்குப் பிடித்தவன்.

குணக் :—தேவாள் தாயார் என் தாயார்; தோவாள் என் தகப்பனார். அப்பா, பெருமாள் கனவிலே சொல்லியாக்கும் இங்கு வந்தேன். பெருமாள் எப்படிக் கனவிலே வந்தாரோ அதே திருமண் கோலத்துடனே தாஸனும் தேவாளிடம் வந்து பக்தி ஸாதனம் பண்ணுகிறேன்.

குப் :—ஆமாம், என் தங்கக் கொழுந்தல்லவோ நீ. ஆசார விவகாரங்களில் வெகு துல்யமாய் இருக்கிறாய். இருந்தும் உன்னை யேன் இவர்கள் தூற்றுகிறார்கள்?

குணக் :—கலிகாலமப்பா! கலிகாலம். ராமாயணம் ஆரம்பத்திலே கலியைப்பற்றிச் சொல்லியிருக்கும் அனுசாரங்களெல்லாம் நடக்கின்றன. நல்லவாள் வாடை இந்தத் துந்துகாரிகளுக்கு ஆகாது; மூலை மடித்துத் துவைத்து, நீர்க்காவி யேற்றிப் பஞ்சகச்சம் வைத்துக் கட்டிய நாள் போயிற்று. வண்ணான் வெளுத்து வந்த சட்டை குடுத்துணி போட்டு உள்ளே வேர்வை பிடித்துப் பீடா தேவி சுற்றிக்கொண்டது. சமாசாரப் பத்திரிகை சந்தி ஜபத்தைக் கெடுத்தது; கச்சேரி அவசரம் கடவுள் பூஜையைக் கெடுத்தது; ஆஸ்பத்திரி மருந்து ஆசாரத்தைக் கெடுத்தது; பக்ஷணக் கடை பசியைக் கெடுத்தது; முகக்ஷவரம் முழுக்கைக் கெடுத்தது; பகட்டுப் பணத்தைக் கெடுத்தது.

குப் :—ஆமாம், அப்பனே ஆமாம். உன் வாய்க்குச் சர்க்கரை போடவேணும்.

குணக் :—இன்னும் கேள். நங்கையைக் கெடுத்தது நகை; பையனைக் கெடுத்தது பள்ளிக்கூடம்; குடியைக் கெடுத்தது கோணல் எழுத்து.

குப் :—முக்காலும் உண்மை. இந்தக் கமலியை அடக்க வொடுக்கமாயிருக்கச் சொன்னால், அவளுக்குக் கோபம் வருகிறது.

குணக் :—கமலியைக் கெடுத்தது கல்வி. அப்பா, எனக்கு எல்லாக் குட்டும் தெரியும். கண் பார்த்துக் கருத்தைப்

படம் பிடிப்பேன். முகம் பார்த்து மூக்காலும் அறிவேன். கமலி பள்ளிக்கூடம் போகிருள் என்று நினைக்கிருய்?

குப் :—பின்னே?

குணக் :—அப்பா, பெருமாள் எனக்கொரு தனி மூளே அருளியிருக்கிருர். ஜாதகம் பாராமலே ஜோசியம் சொல்வேன்; கை பாராமலே ரேகை சொல்வேன்; கண் பாராமலே காட்சியைச் சொல்வேன்; கேளாமலே நடந்ததைச் சொல்வேன்; பெண்சாதி கைபார்த்துப் புருஷனுக்குப் பலன் சொல்லுவேன்.

குப் :—உனக்கெல்லாம் தெரியும். தினம் பதினுயிரம் ராமஜபம் பண்ணுகிருய்.

குணக் :—அப்பா, கமலி மூஞ்சியிலே வேணு களே கூத்தாடுகிறது.

குப் :—அந்தப் பயல்தான் ஊரைக் கெடுத்துவிட்டான். முன்னோர் பழக்கமெல்லாம் போயின. செத்தாலும் இந்தக் குட்டியை அவன் தொட விடமாட்டேன்.

குணக் :—அப்பா, வேதத்தைக் கெடுத்தது வேணு; பெண்டுகள் படிக்கவும், மேடையேறவும், சைகிளிலே போகவும், பத்திரிகை படித்து ஊர்வம்பளக்கவும், கூட்டம் போடவும், சாதியாசாரம் பாராமல் கூடியுண்ணவும், பெருமை பேசவும், உரிமை கேட்கவும் ஆரம்பித்துவிட்டார்கள். இனி, ஆண்பிள்ளேகள்தான் பதினறு முழம் உடுத்திக்கொண்டு, அடுப்புக் காரியம் பார்க்க வேணும்! பெண்ணேக் கெடுத்தது பிரசங்கம். கற்பைக் கெடுத்தது கலப்பு; சாதியைக்கெடுத்தது சங்கம்; சீமானேக் கெடுத்தது சினிமா.

குப் :—ராம, ராம! இப்படியொரு காலமும் வருமா ? கலி புருஷன் வக்ரபுத்தி எப்படியெல்லாம் ஆட்களை ஆட்டி வைக்குமோ ? என் பெண்ணும் அப்படி! பிள்ளையும் அப்படி! அவளும் மேற்படி. எல்லாம் வேணுக் கூட்டம்.

குணக் :—பிரியைக் கட்டி இழுக்கவேணும். அப்பா. அப்பன் சொல் கேளாத பெண் பெண்ணு? சுதந்திரமாம்! பெண்ணுக்கேது ? குட்டி பெற்றோருக்கு, மனைவி கண வனுக்கு, கிழவி பிள்ளைகளுக்கு அடங்கி நடக்கவேண்டு மன்றோ ? அப்பா, உன் வீட்டில் உன் அதிகாரந்தான் நடக்கவேணும்.

குப் :—அதுதான் நியாயம். இங்கே எல்லாம் தலைகீழ்ப் பாடம். பரலோகார்த்தம் ராம ஸம்பத்து சம்பாதிக்க ஏதோ ஜபம் செய்கிறேன். ஸம்ஸார பந்தம் சோதிக் கிறது.

குணக் :—அப்பா, கிட்டத்தட்ட 9 கோடி உருவேறினு லும், எமபடாள் கையில் படாமல் விமானத்தில் சுக மாகத் திருநாட்டிற்கு ஏழலாம். அப்பா, நீ நிம்மதி யாகக் கதவை அடைத்துக்கொண்டு ராமஜபம் பண்ணு. தாஸன் இருக்கிறேன்; வீட்டை முதல்தர மாக நடத்துகிறேன்.

குப் :—அதுதான் உத்தேசம்; கொழுந்து, என் விருப்பம் உனக்குத் தெரியும்.

குணக் :—அப்பா மனம் வேறு, பிள்ளை மனம் வேறு ? அப்பா, சீமான் பாஷாண்டி; வேணுவின்வால். உனக்கு நான்தான் பிள்ளை. உன்னை உயிர்போல நேசிக்கின் றேன் ; இவர்களுக்கெல்லாம் பொறுமை.

குப் :—இருக்கட்டும். இத்தனைபேரும் உன் கை பார்த்துப் பிழைக்கும்படி செய்கிறேன்.

குணக் :—

தாயே தந்தை யென்றும் தாரமே கிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன் உன்னைக் காண்பதோ ராசையினல்
வேயேய் பூம்பொழில் சூழ் விரையார் திருவேங் கடவா,
நாயேன் வந்தடைந்தேன் நல்கியா ளென்னைக் கொண்டருளே.

தேவாள் திருவடியிலே தண்டன். தண்டன், தண்டன் நூறு தடவை தண்டன்! தாஸன் திருவுளப்பாவை.

குப் :—நீதான் என் தங்கப் பிள்ளை. கமலியைத் தந்து வீடு காணியெல்லாம் உன் பெயருக்கே எழுதி வைக்கப் போகிறேன். கொழுந்திற்குச் சம்மதமா ?

குணக் :—இரட்டைச் சந்தோஷம்; தேவாள் வார்த்தையைத் தட்டுவேனு? ஆனல், ராம, ராம......

குப் :—யோசனை வேண்டாம். தூணில் கட்டிபோட்டுத் தாலி யேற்றுகிறேன்.

குணக் :—அதற்காக இல்லை. பத்துப்பேருக்குப் பதில் சொல்லுவேன், சிங்கம். ஆனல்...ராம ராம......

குப் :—இன்னுமென்ன ? என் ஆஸ்தி பாஸ்தியெல்லாம் உன்பேருக்குப் பத்திரம் பண்ணித் தருகிறேன். இன்றே எழுதித் தருகிறேன்.

குணக் :—தேவாள் தயவிருந்தால் போதும். ஆனல்... ராம...ராம......

குப் :—அந்தப் பயல் சீமான் உன் பக்கம் வந்தால், கண்ணை விட்டு உரிக்கிறேன்.

குணக் :—அப்பா மனம்வைத்தால் எதுதான் நடக்காது. ஆனால்... ராமா......

குப் :—என்ன ஆனால்? சந்தேகம் வேண்டாம். தலை முதல் கால் மட்டும் தங்கமாக இழைக்கிறேன். அந்த நாகரிகப் படை உன் பக்கத்தில் வராது பார்த்துக் கொள்ளு கிறேன். கமலி கையிலே புஸ்தகம் எடுக்கவொட்டா மல் செய்கிறேன்.

குணக் :—அதற்குத் தாஸன் இருக்கிறேன். இடுப்பிலே குடமேற்றிச் சமயல் புகையிலே போட்டு வதக்கினால் எல்லாம் அடங்கிப் போகும். ஆனால்... ராம ராம.

குப் :—என்னடா கண்மணி?

குணக் :—உ, உ ஊம்..... (அழுகிறான்)

குப் :—ஏண்டா என் தங்க துரையே, ஏன் அழுகிறாய்? உனக்கென்ன குறைவு?

குணக் :—தேவாள் மேலே உயிராயிருக்கிறேன். கலியாணம் பண்ணிக் கொண்டால் இந்த அன்பிற் பாதி மனைவி யிடம் போகுமோ என்று பயப்படுகிறேன்.

குப் :—பரவாயில்லையடா கண்மணி. கமலியைவிட நானே உன் பக்கத்தில் இருப்பேன்.

குணக் :—(இரண்டு விரல் காட்டி) எம்பெருமானே, உனது திருவுளம் நடக்கட்டும். அப்பா இரண்டிலொன்று தொடட்டும். (தொடல்) ஜயம், ஜயம். அப்பா அன்பு மறக்காது வளரும் என்று உத்திரவாகிறது. தேவாள் பத்திரம் எழுதட்டும். புதன்கிழமை, நல்ல நாள், 4-மணிக்குத் துலாலக்கினத்திலே எழுதட்டும். தேவாள் பெண்டுகளிடமும் யோசிக்கவும்.

குணக் :—நாம் சொன்னபடி கேட்பதுதானே பெண்கள் கடமை. மாப்பிள்ளை சம்மதித்தால் பாதிக் கலியாணம் ஆனது. மறுபாதியைப் பூர்த்தி பண்ணலாம்.

(சீமான் வருதல்)

சீமான் :—பண்ணலாம், பண்ணலாம். வீட்டைக் குட்டிச் சுவரு பண்ணலாம் !

குணக் :—அட பயலே, ஓட்டுக் கேட்கிருயா ? படி போ.

சீமான் :—பண்ணலாம், பண்ணலாம் !

குணக் :—சீ போ, சூனிய நெற்றியும், கிராப்பும், சட்டையுமாக எதிரே வருகிருன் சண்டாளன் !

சீமான் :—இனிச் சண்டாளன் கிடையாது ! தீண்டாமைப் பேய் ஓடிப்போயிற்று.

குப் :—போ, ப்ரருஷ்டப் பயலே, ஒரு சந்தி மாத்யானம் கிடையாது.

சீமான் :—சந்தியின் அர்த்தமென்ன ?

குணக் :—அது வேதமந்திரம் ; அர்த்தம் சொன்னுல் அபசாரம். அதுவும் பாஷண்டிகளுக்குச் சொல்லக்கூடாது. போ.

சீமான் :—ஆத்ம ஞானந்தான் வேதமுடிவு. அதை உள்ளடங்கின தியானத்தால் பெறலாம். உள்ளே அவனைக் கண்டால் உலகெல்லாம் அவன் திருக்கோயிலாகக் காணும். பக்தியும் உள்ளிருந்து பிறக்கவேணும்.

குணக் :—உலகமாம், கோவிலாம், உள்ளாம்; இங்கே பேசாதே; பூஜைப் பெட்டியிலே யிருக்கிற பெருமாளுக்குக் கோபம் வரும்.

சீமான் :—ஸர்வாத்மாவை உன் பூஜைப் பெட்டியில் அடைத்துப்போடுவாயா ?

குணக் :—தாஸனும் தேவாளும் என்ன வேண்டுமானாலும் செய்வோம். நீ யார் கேட்க ?

சீமான் :—ஹல்வா, பருபி, குலாப்ஜான், பால் போளி, லட்டு எல்லாம் பண்ணிப் பெருமாள் பெயரால் இரகசியமாக வைத்துத் தீட்டு.

குப் :—நாஸ்திகப் பயலே, பூஜைப் பெட்டியிலே எழுந்தருளியிருக்கும் இரண்டு பெருமாளையும் நம்பு...நம்பு.

சீமான் :—இல்லாவிட்டால்?

குப் :—உதை.

சீமான் :—நம்பிக்கை உதைத்தால் வராது; உணர்ந்தால் வரும்.

குப் :—இருக்கட்டும் பயல்களா ; உங்களை அவன் கை பார்த்துப் பிழைக்க வைக்கிறேன்.

சீமான் :—நடக்காது.

குப்:—என் ஆஸ்தி முழுதும் அவனுக்கு எழுதிவைத்தால்...?

சீமான் :—எழுதுமுன்பே பாதி ஆஸ்தி நாஸ்தி ; இப்படியேயிருந்தால் முழுதும் சரி. அது நடவாது.

குப் :—அவன் கமலி புருஷனானால் ?

சீமான் :—நடக்காது ; ஒருகாலும் நடக்காது.

குப் :—உன்மனப்படி தானே ?

சீமான் :—கமலி மனப்படி.

குப் :—அந்தக் குட்டிக்கென்ன தெரியும் ?

சீமான் :—தன் கணவன் இன்னானென்று அவளுக்குத் தெரியும்.

குணக் :—வேணுவின் வாலே, தேவாளுக்கு மேலே உனக்கு ரொம்பத் தெரியுமோ ?

குப் :—என்னிச்சைப்படி !

சீமான் :—பெண்ணிச்சைப்படி !

குணக் :—பெண்ணுக்கு வாயேது ?

சீமான் :—உன்க்கு என் வீட்டில் வாயேது? ஆணைப் போலப் பெண்ணுக்கும் வாய் ,நாக்கு, காது, மனம், ஆத்மா எல்லாம் உண்டு. அப்பா, இவன் பேச்சைக் கேட்டுக் கெட்டுப்போக வேண்டாம்.

குப் :—அதிகப்ரசங்கி, உதைக்கிறேன் பார்.

சீமான் :—அப்பா, மோசம் போகாதே.

குப் :—வைகுண்டவாசன் என்னைக் காப்பாற்றுவான்.

சீமான் :—வைகுண்டத்தையே அண்ணாந்து பார்த்து வீடு திவாலானது.

குப் :—ஓடு வெளியே; உதை.

குணக் :—தேவாள் திரு வுலக்கையால் அடிக்கவேண்டாம். குழந்தை தாங்கமாட்டான்.

குப் :—அதுதான் வேண்டும், கொண்டா.

[குணம் உலக்கை தருகிறான்; குப்பண்ண அடிக்கப்போகிறான்; சீமான் மறுமுனையை கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகிறான். இரண்டுபேரும் இழுக்கின்றனர்.]

விட்டேனா உன்னை.

சீமான் :—அப்பா, உலக்கைக்குத் திருமண் சாத்தவில்லையே! நீ தொடலாமா ?

குப் :—ஆ! ஆமா, குணம், சாத்துத் திருமண் (குப்பண்ணு கையை விட்டதும், சீமான் உலக்கையைப் பிடுங்கிக் கொண்டு ஓடிப்போகிருன்).

சீமான் :—கொழுந்து உன் கூரையிலே கொள்ளி சொருகுவான். அப்பா மோசம் போகாதே.

குப் :—உதைக்கிறேன். (போகிருன்)

குணக் :—தேவாள் அவனைத் தொடவேண்டாம். அவனுக்கு நாமமுண்டா! சௌசமுண்டா! நானிருக்கிறேன் சிங்கம் ; இரு பயலே. (சீமானைத் துரத்துகிருன்)

(திரைக்குப் பின்னே)

சீமான்:—அட ஆஷாடபூதி! போக்கிரி! உன் குட்டை உடைக்கிறேன் பார்.

குணக் :—நாஸ்திகப் பயலே, திருவுலக்கையால் உன் மண்டையை உடைக்கிறேன் பார்...

(இருவரும் துரத்தி ஓடல்)

(செல்லம் வருதல்)

செல் :—இதென்ன அமளி! என்ன கொடுமை! என்ன அநியாயம்!

குப் :—இல்லையடீ, அந்த அதிகப் பிரசங்கியைக் கொஞ்சம் மிரட்டினேன் ; நெஞ்சிலே பயம் இருக்கவேண்டுமல்லவா? நான் வீட்டு எஜமானல்லவா ?

செல் :—நன்றாயிருக்கிறது எஜமான் லட்சணம்.

(கோபமாகப் போகிறாள்)

குப் :—கோபம் வேண்டாம், கண்ணே, என் முத்தே...

(பின்னால் போகிறார்)

---

## காட்சி 13

சேஷி—கமலம்

[சேஷி கல்யாணச் செய்தியைக் கமலத்திடம் சொல்லி உப தேசிக்கிறாள்]

சேஷி :—கமலிக்குக் கண்ணாளம்; அடுத்த வருஷம் தங்கம் போலே, குப்பண்ணுவுக்குப் பேரன் பிறக்கும். அடீ கமலீ, நலங்கு சொல்லிக்கோ.......

ஸ்ரீ...ராமா...ஜய ஜயா! சீதா ரா மா ப்ரேமா!

கமலி :—எனக்குப் பிடிக்கவில்லே.

சேஷி :—தங்கக் கம்பி குணக்கொழுந்து ; உன் பரணிக்கும் அவன் கேட்டைக்கும் சரியான பொருத்தம்! புதன் கிழமை நாள்—பொன் கிடைத்தாலும் புதன் கிடைக் காது. குணக்கொழுந்து.......

கமலி :—அந்த உலக்கைக் கொழுந்து பேச்சு வேண்டாம்...

சேஷி :—ஆம்படையானடீ! அசடே, கட்டிக்கொண்டவன் குஷ்டரோகியானாலும் நளாயணி கூடையிலே சுமக்க வில்லையா! ஆம்படையானை மிஞ்சி தெய்வமேது? தர்ம மேது?

கமலி :—பாட்டி, பழங்கதை போதும்; என்னைக் கழு வேற்ற வேண்டாம்.

சேஷி :—ரொம்பத்தான்! குப்பண்ணு வீடு வாசலெல்லாம் அவன் பேருக்கு எழுதி வைத்திருக்கிறான். 10000 ரூபாய் செலவில் கலியாணம் நடக்கிறது. சீர் செல்வம் எல்லாம் ஏராளம்!

கமலி :—நீ பண்ணிக்கோ—நான் போகிறேன்.

[செல்லம் வருதல்]

செல்லம் :—வா கமலம், இன்று மகிளா மந்திரம் வருஷக் கொண்டாட்டம். பெண்டுகள் கூட்டம், மோட்டார் வந்திருக்கிறது. வா.

கமலம் :—அம்மா, இந்த வீடு எனக்குப் பிடிக்கவேயில்லை.....

[இருவரும் போதல்]

சேஷி :—நீ போவாயா! போவாயா! காலை ஒடித்துக் கம்பத்திலே கட்டிக் கண்ணுக்குக் கிராம்பு போடுவேன். இந்த மோட்டாருக்கொரு கழிச்சல் வராதா! அத்தனை சீமை எண்ணெய் விட்டு எரிக்கிறானுமே! இன்னும் அது சாம்பலாய்ப் போகவில்லையே! நாராயணு, ராதாக்ருஷ்ணு, சீதாராமா, தும்பிக்கையாழ்வானே, அழகிய சிங்கரே, தாலிகட்டிக் கண்ணாலே பார்க்க வேண்டுமப்பா. திருப்பதிப் பெருமாளே, உனக்கு இருநூறு ரூபாயில் திருக்கல்யாணம் நடத்துகிறோம். அலமேலுமங்கைத் தாயாரே, கடாக்ஷிக்கவேணும். நாலு வருஷத்துக்கு முன்னேயே தாலி கட்டிப் பேரன் பேத்தி எடுத்திருப்பேன். ஜாதகத்திலே கூட அப்படியிருந்தது. இந்த எழவெடுத்த வேணுக்

கூட்டம் சர்க்காரிலே பேசி சின்னஞ் சிறிசுகளுக்குக் கலியாணமாகாதே பண்ணிடுதுகளே! கலிகாலம், கலிகாலம்! ராம! ராம! ராம......

[தலையிலடித்துக் கொண்டு போகிறாள்]

---

## காட்சி 14

[மகிளா மந்திரம்: சுற்றும் புஷ்பச்செடிகள்; நடுவில் வெட்டவெளி; அதில் கமலத்துடன் 8 பெண்கள் அழகாகக் கும்மியடிக்கின்றனர். நடுவே ஒரு திருவிளக்கு; சுற்றிலும் சபையோர்; வேணு அக்ராஸனம். அருகே பங்கஜம், செல்லம், கோமதி, கோபாலன், சீமான் காண்கின்றனர்.]

[இந்தக் கும்மியை இரண்டு வரிகள் கமலம் சொன்னதும், மற்றவர் திருப்பிச்சொல்லிக் கும்மியடிக்க வேண்டும். பல்லவி எல்லோரும் சேர்ந்து]

### [பெண் சக்திக் கும்மி]

விண்ணமு தம்பொழி வெள்ளி நிலாவில்
விடுதலைக் கும்மி யடித்திடுவோம்;
பெண்ணமு தங்களின் பிறப்பு ரிமைகள்
பேசிக் கும்மி யடித்திடுவோம்.

பாவிற் கலந்த பசுந்தமிழ்த் தேனெனப்
பண்க ளிசைத்து நடித்திடுவோம்;
காலிற் சிலம்பு கலீரெனப் பொன்மலர்க்
கைக ளடித்துக் குதித்திடுவோம். (விண்)

கட்டுகளை முட்டுக் கட்டுகளை வெட்டிக்
காலப் பயிருக் குரம்போட்டோம்
தட்டுத் தடைக ளில்லாத சுதந்திரத்
தங்கக் கனிவளம் பொங்கிடவே! (விண்)

கற்பது பெண்ணுக்குக் கண்ணென்போம்—தெய்வக்
கலை மகளொரு பெண்ணன்றோ?
அற்புத மாம்அறி வாற்றல்கள் யாவையும்
ஆண்களுக் குள்ளவை பெண்களுக்கும். (விண்)

பொருத்த மில்லாத பொம்மை மணம்—வீட்டைப்
பொட்ட லடிக்கும் வரசுல்கம்
அருத்த மற்ற சடங்குகள் யாவையும்
அள்ளிப் பழங்குழி தள்ளிடுவோம். (விண்)

வீட்டிற் கரசியும் பெண்ணன்றோ—வீரர்
விளைந்த கற்பகம் பெண்ணன்றோ
நாட்டின் சமப்பங்கு பெண்ணன்றோ—பொது
நல வலக்கரம் பெண்ணன்றோ? (விண்)

அல்லியைப் போல்அர சாண்டிடுவோம்—அருள்
ஒளவையைப் போற்கவி பாடிடுவோம்;
வள்ளியைப் போல மனங்கொண்ட காதல்
மணாளரை யின்புறக் கூடிடுவோம்! (விண்)

காதல் வளர்வதும் பெண்ணாலே—இன்பக்
கலை வளர்வதும் பெண்ணாலே
ஆதரமான மனையறம் பூத்துநல்
அன்பு கனிவதும் பெண்ணாலே! (விண்)

தீரர் வளர்வதும் பெண்ணாலே—தேசத்
திருவளர்வதும் பெண்ணாலே;

பூரண சக்தி யமுதம் பொசிந்துயிர்
போகம் வளர்வதும் பெண்ணாலே. (விண்)

பெண்ணுங் கணவனுங் கண்ணுங் கதிரும்போல்
பேரன் பறிவழ காற்றலுடன்
தண்ணுந் தரையெனத் தர்மப் பயிர்செய்து
சக்தி சிவனென வாழ்ந்திடுவோம்! (விண்)

(கும்மிப் பெண்கள் அவரவரிடத்தில் உட்காருகின்றனர். தலைவர் வேணு முடிவுரை பேசுகிறார்.)

வேணு:—சகோதரிகாள், சகோதரர்காள், இந்தக் கன்னியர் இனிது குதித்துப் பாடிய இக் கும்மியே நமது கொள்கையை விளக்குகிறது. அதனால் எனது முடிவுரையைச் சுருக்கிக் கொள்ளுகிறேன். இன்று நமது காதுக்கும் கண்ணுக்கும் அரிய விருந்து கிடைத்தது. இப்போது நாவிற்கு ஒரு இனிய விருந்து காத்திருக்கிறது—நிலாச் சாப்பாடு. அன்பர்களே, இன்று உயர்த்திய பெண்ணுரிமைக் கொடி நமது நாட்டில் சக்திக் கனல் பரப்புக! இங்கு இன்று நடந்த ஆடல், பாடல், பந்தயம், காட்சி, சொற்பொழிவுகளெல்லாம் இந்த மகிளா மந்திரத்தின் அபிவிருத்தியை நன்கு விளக்குகின்றன. இந்த மந்திரத்தின் உயிர் நாடியான பங்கஜம்மாளுக்கும் செல்லம்மாளுக்கும் அவர்களுடன் உண்மையாகப் பாடுபடும் பாகீரதி அம்மாள், லக்ஷ்மி தேவி, ருக்மணி பாய், மீராதேவி, முதலியோருக்கும் பெண்ணுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. அவர்கள் படித்த அறிக்கையைக் கேட்டீர்கள். இம் மந்திரம் ஒரு

வருஷத்தில் 100 மாணவிகளுக்கு உடை, உணவு, கல்வி, தொழில் எல்லாம் அளித்துள்ளது. 50 தேவ தாசிகளைத் திருத்தி, இல்லறம் புகச் செய்துள்ளது; 550 இள நங்கையர் மறு மணம் புரிய உதவி செய் துள்ளது; 50 அனாதைக் குழந்தைகளைக் காப்பாற்று கிறது. அதில் 30 பேர் நிர்க்கதியான திருக்குலப் பெண்கள் (கர கோஷம்). இறைவன் ஒருவன்; ஒவ் வொருவர் உள்ளமும் அவன் கோயில்; உயிர்களெல் லாம் நடமாடுங் கோயில் என்ற பரந்த கொள்கையை நிலைநாட்டிய முன்னேற்றச் சங்கத்தின் இதயம் இந்த மகிளாமந்திரம். இன்று சுமார் 2000 பேராவது தீண் டாமை, சாதி, மத பேதம், பிஞ்சு மணம், வலு மணம், வரசுல்கம், வீண் சடங்குகள், கைம்பெண் கண்ணீர், விபசாரம் முதலியவற்றின் தீமைகளை ஒழித் திருக்கின்றனர். அதன் பெருமை நமது சங்கத்தைச் சேர்ந்தது. நமது சங்கத்தின் சக்தியான இந்த மகிளாமந்திரம் இறைவனருளாலும் நண்பர் அன்பா லும், தொண்டர் பணியாலும் ஓங்கி வளர்க!

(நீண்ட கரகோஷம்)

பங்கஜம்:—எமது அருமைத் தலைவரே, சகோதரிகளே, சகோதரர்களே, இந்த மகிளாமந்திரம் ஏதேனும் நன்மை செய்திருப்பின், அது நமது அற்புதத் தலை வர் ஸ்ரீமான் வேணுகோபாலையே சேரும். (கரகோஷம்). இதில் இருக்கும் குறைகள் என்னையே சாரும் (இல்லை, இல்லை). இந்த முதல் வருஷக் கொண்டாட்டத்தைப் பெருமைப் படுத்திய சகோதர சகோதரிகளுக் கெல்லாம் வந்தனம். தலைவர் குறிப்பிட்ட நாவிருந்து

தயாராயுள்ளது. சந்திரன் வெண்பட்டு விரித்து நம்மை யழைக்கிறான்.

எல்லாரும் :—பெண் சக்தி வாழ்க! எந்தாய் வாழ்க!

(சபை கலைதல்; அனைவரும் விருந்திற்குச் செல்லல்.)

---

## காட்சி 15

[குணக்கொழுந்து பங்கஜத்தின்மேல் காமுறுகின்றான்; கோபாலனை வெறுக்கிறான். அந்தி நேரம். பங்கஜம் கமலத்திற்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்தபின், மகிளா மந்திரத்திற்கு வரும் வழி. ஒரு குளக்கரை. தனிமை; குணக்கொழுந்து அங்கே காத்திருக்கிறான்.]

குணக் :—இந்தக் கொழுப் பெடுத்த கோபாலனை ஒரு இறுக்கு இறுக்கவா, குத்தவா, கொன்று குளத்திலே எறியவா? சதா அவள் மேலே கண்ணாயிருக்கிறான். இவன் மோகத்தால் அவள் என்னை வெறுக்கிறாள். பங்கஜம், பங்கஜம், நீ கிடைத்தால் இந்திரபோகம் அனுபவிப்பேன். அடுத்த புதன் முகூர்த்தம். கமலிக்குத் தாலி கட்டி, வீட்டைக் காலி பண்ணி, ரொக்கத்தைக் கைப்பற்றிச் சலோ கும்பகோணம். நீ வந்தால் வெகு சுகமாக ரெட்டை ராயர் வீதி பங்களாவிலே யிருக்கலாம். பங்கஜம் என்றால் பங்கஜம்! அழகுப் போட்டியிலே அவளே மிஸ் இந்தியாவாகப் பரிசு பெறுவாள். டாக்கி நட்சத்திரமானால் மாதம் 6000 தருவார்கள். நல்ல முக வெட்டு, இனிய குரல், பொன்னுடல், மலர் விழி, பவளவாய், முத்துநகை, மோகன சௌந்தர்ய லக்ஷ்மி என்றால் இந்த இளம் விதவைதான். ஆ! வருகிறாள்.

பங்கஜம் :—(ஆழ்ந்த யோசனையுடன் வருதல்) எப்படியாவது கமலத்தைக் காப்பாற்ற வேண்டும். கிளியை வளர்த்துப் பூனைக்கா கொடுப்பது? இதோ இன்றிரவே நண்பருடன் யோசனை செய்கிறேன். இவனெங்கு வந்தான்......ஈசனே !

குணக் :—பங்கஜம், சௌக்யமா ?

(பங்கஜம் உபேக்ஷையாகச் செல்லுகிறாள்.)

குணக் : —கண்ணே, முகங்கூடப் பாராது போகிறாயே ! என்னுயிரெல்லாம் உன்மேல் வைத்திருக்கிறேன்.

பங்கஜம் :—குணக்கொழுந்து, உனக்குப் புதன்கிழமை கலியாணமாயிற்றே !

குணக் :—ஆம் !

பங்கஜம் : —குப்பண்ணா ஆஸ்தியெல்லாம் உன் பெயருக்காமே ?

குணக் :—ஆமாம் ; தடை வேறு ?

பங்கஜம் :—உன் மனைவி கமலி தானே ?

குணக் :—இல்லை.

பங்கஜம் :—பின்னே ?

குணக் :—கமலியின் பாட்டு வாத்தி......

பங்கஜம் :—சீ துஷ்டா !

குணக் :—உன் வசவு ஆசீர்வாதம். கண்ணே ஆறு மாதமாகத் தவிக்கிறேன். என் அமுதமே, முத்தே!

(கிட்ட நெருங்குகிறான்)

பங்க :—கிட்ட வந்தால் தெரியுமா செய்தி ! எட்ட நில் ! ஊஉ! ஆஷாடபூதி! உன் முகரைக் கட்டைக்கு முகூர்த்

தம் வேறு! கலியாணம் வேறு! வெளியே ராம ஜபம்; உள்ளே காம ஜபம்! வைகுண்டம், ராமன், ஜபம் என்பாயே எல்லாம் ஹோ கயாவா?

குணக்:—கண்ணே, உன் காலடியே வைகுண்டம்; நீயே தெய்வம்; உனது பெயரே ஜபம்; உன்னை யணைவதே மோக்ஷம்; நீயே எண்ணம்; நீயே இன்பம்; அழகு மோகனமே, உன் காலில் விழுகிறேன். உன் மலரடியை என் தலைமேல் வை; மகுடமாகத் தாங்குகிறேன். என் அழகுத் தெய்வமே, என்னுடன் வா. இந்திரபோகம் அனுபவி வா......

(கையைத் தொடுகிறான்).

பங்க:—தெய்வமே, இந்த அந்தி மயக்கத்தில் யார் துணை? தெய்வமே! (கோபாலன் வருதல்)

கோபாலன்:—இதோ! தெய்வம் இந்தத் துஷ்டனை ஒரே குத்தில் எமலோகம் அனுப்புகிறது.

(குணக்கொழுந்தைக் கட்டிப் பிடிக்கிறான்)

பங்க:—முரடனுடன் போர் செய்யவேண்டாம். அபாயம்! குணம், நீ மரியாதையாகப் போய் விடு.

குணக்:—போவேனா! இவனாலேதானே என்னை நீ வெறுக்கிறாய். இவனைக்கொன்ற இரத்தக்கையால் உனது மலர்க்கரத்தைப் பிடிக்கிறேன்.

கோபா:—வா பயலே. சரியானபடி அகப்பட்டுக் கொண்டாய்! உன் குட்டை உடைக்கிறேன்.

குணக்:—உன் மூக்கை உடைக்கிறேன்.

பங்க:—ஐயையோ! அபாயம்! இதோ ஆட்களைக் கூட்டி வருகிறேன். ஓடுகிறாள்)

குணக் :—பகதூர், தினம் 500 கஸரத், ஒரு வீசை பாதாமி ஹல்வா சாப்பிடுகிறேனுக்கும். உன்னைப் பீட் புரட்டுகிறேன் பார்.

கோபா :—உனக்குத் தீனி பலம்; எனக்குப் பிரமசரிய பலம் உள்ளது பார்.

(இருவருக்கும் குஸ்தி)

(திரைக்குப் பின் நண்பர்)

பிடி! பிடி! அந்தப் போக்கிறிப் பயலை ஜெயிலில் அடை! களவாணிப் பயல்!

(குணக்கொழுந்து விரைவாகக் குளத்தில் குதித்து நீந்தி ஓடிப் போகிறான்) (பங்கஜம் வருதல்)

பங்க :—ஓடிப்போனான்; நீங்கள் திரும்புங்கள்.

கோபா :—துரத்தியடிக்கிறேன் பார்.

பங்க :—வேண்டாம், அந்தமட்டோடே தொலையட்டும். காதல,

கோபா :—என் கண்ணே, உன்னை அவன் தொட விடுவேனா? அவன் இங்கு இருப்பது தெரிந்துதான் மறைந்து வந்தேன்.

பங்க :—காதல, அவன் தீமையே அவனைக் கெடுக்கப் போகிறது. நாங்கள் ஒரு முக்கியமான யோசனை செய்திருக்கிறோம். வாருங்கள் சொல்லுகிறேன்.

(இருவரும் போதல்)

---

## காட்சி 16

[ஒரு மோட்டாரில், கமலம், பங்கஜம், கோபாலன், சீமான் எல்லாரும் செல்லுகின்றனர். ஒரு மாங்தோட்டம் வருகிறது]

கோபா :—வண்டி நிற்கட்டும்.

(மோட்டார் நிற்கிறது)

இறங்குங்கள், உள்ளே போவோம்.

(வேணு ஓடிவருதல்)

வேணு :—நமஸ்தே—எல்லாரும் வாருங்கள்......

(எல்லாரும் தோட்டத்திற்குள் போதல். அங்கே ஒரு பங்களா மாடியில் ஏறி, உப்பரிகையில் உட்காருகிறார்கள். அங்கே ரோஜாச் செடிகள் காண்கின்றன. வேணு ஆளுக்கொரு ரோஜா மலர் தருகிறான்)

கோபா :—வேணு, காரியம் மிதமிஞ்சிப் போயிற்று. தெரியுமா ?

வேணு :—தெரிந்ததுதானே ; குப்பண்ணா அப்பாவி ; ஆஷாடபூதியின் பாசாங்கில் சிக்கி யிருக்கிறான். பெண்ணும் பொருளும் அவனுக்குத் தரப்போகிறானாம்.

பங்க :—போகிறானா? எழுதிக் கொடுத்தாயிற்று? முகூர்த்தம் புதன்—இன்னும் நாலே நாள். மானைப் புலியிடமிருந்து மீட்கவேண்டும்.

வேணு :—மான் இந்தத் தோட்டத்தில் மறைவாக இருக்கலாமே ! புலியை ஒரு கூண்டிலடைத்துப் பிடித்துச் சக்கையாக வெளுக்கலாமே......

கோபா:—சபாஷ்! நிதானமாகச் சொன்னாய். ஆனால் இந்த இடம் தெரிந்துபோகுமோ?

வேணு:—சந்தேகம் வேண்டாம். இது பங்காருசாமியின் ப்ருந்தாவன விலாஸ். நான் இங்கு வருவதே யாருக்கும் தெரியாது. பங்காருசாமி நாளை வருகிறார். அவரிடம் விஷயத்தைச் சொல்லி ஏற்பாடு செய்யலாம்.

கோபா:—அதிகமான போலீஸ் பரபரப்பில்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். புதன் முகூர்த்தம் சங்கத்தில் இருக்கவேண்டும். ஸர்கிள் இன்ஸ்பெக்டர் சிவ சங்கரத்திற்கும் சொல்லிவைப்போம். ஒரு துப்பறி வழக்கு என்றால் போதும்.

வேணு:—அதற்கெல்லாம் நான் ஏற்பாடு செய்கிறேன். இரண்டு காரியம்:—கமலத்தை இங்குக் கொண்டுவர வேண்டும். அடுத்த நாளே ஆஷாடபூதியின் மோசம் வெளிப்படவேண்டும். குப்பண்ணா மயக்கம் ஒழிய வேண்டும். புதன் இரவு 8-மணிக்கு அவர்களைச் சங்கத்திற்கு இட்டுவரவேண்டும்.

சீமான்:—நாளாயிற்று; ஆனால் கமலியை எப்படி இங்கு அழைத்துவருவது? மோட்டாரிலா?

வேணு:—பங்காருசாமியின் மூத்தபிள்ளை போலவே இருக்கிறாள் கமலம். ஆணுடை தரித்து...கோபாலனுடன் ...மாலை 6½ மணிக்கு......

கோபா:—தெரிந்தது. கமலம், புரிந்ததா?

கமல:—ஊ......எப்படியாவது எண்ணம் நிறைவேறட்டும்; திங்கள் மாலை 6½ மணிக்கு, ஆணுடையுடன் பார்க்கில், கிழக்குக் கோடியில் மனோரஞ்சிதச் செடிக் கீழ்க் காத்திருப்பேன்.

கோபா :—சரி ; மோட்டார் வரும் ; மற்றதெல்லாம் பிறகு.

பங் :—அடுத்த காரியம் ஆஷாடபூதியை ஒழிப்பது......

வேணு :—அதற்கு நீதான் சரி ; கோமதியைத் தெரியுமா?

பங் :—ஆமாம் ; அவள் தன் தொழிலை வெறுத்துப் பக்தி செய்ய முனைந்திருக்கிறாள்.

வேணு :—குணக்கொழுந்து அங்கேதான் இருப்பதாமே?

பங் :—ஆம், தெரிந்தது யோசனை.

வேணு :—அதிகப் பேச்சுவேண்டாம். காரியத்தில் கண்ணுயிருப்போம். பங்கஜம், எப்படியாவது நீதான் அந்த ஆஷாடபூதியின் மோசத்தை வெளிப்படுத்த வேண்டும். உன்மேல் அவனுக்குப் பைத்தியம்.

பங் :—எல்லாம் யோசித்து வைத்திருக்கிறேன். செவ்வாய் இராத்திரி என் மனையிலேயே அவனைக் கையும் களவுமாகப் பிடிக்கலாம்.

வேணு :—அதுதான் சரி, இனிச் செல்வோம்.

(செல்லல்)

---

## காட்சி 17

[கமலம்—வேணு]

வேணு :—என்னுயிர்க்கிளியே, அஞ்சாதே ; கலங்காதே ; உன்னுயிர் என்னுயிர் ; உன்னலம் என்னலம் ; உன்னின்பம் என்னின்பம்.

கம :—காதல, தங்கள் அன்பும் காதலும் மாசற்றவை. தங்களை மணப்பது, இல்லேல் இறப்பது—இதுவே என் முடிபு.

வேணு :—கண்ணே, நமது காதல் வெற்றிபெறும். நம்மிரு வருக்கும் ஒரே மனம் ; ஒரே கொள்கை ; ஒரே உயிர். கலங்காதே...

கம :—நாதா, நமக்குக் குறுக்கே இத்தனை இடர்கள் உள்ளனவே !

வேணு :—தைரியமாயிரு, கண்ணே ; காதலின் பாதை கரடு முரடாகத்தானிருக்கும். அதில் நடக்கக் காதலே துணை. காதலின் கண்ணீரெல்லாம் அன்பின் அமுத வூற்று.

கம :—நாதா, தந்தைக்கு வைகுண்டமே நினைப்பு ; குடும்பம் கசப்பு ; பாட்டிக்கு, பழம்பிடிவாதமே பாடம். இருவரும் குணக்கொழுந்தின் பாவைகள். சீனப் பெண் மாதிரி என் காலைக் குறுக்கிக் கட்டிப்போட வேண்டுமாம் ; கூடு போட்டு அடக்க வேண்டுமாம். நேற்றெல்லாம் கட்டுங் காவலுமாயிருந்தேன் ; நமது சங்கமென்றால் பாட்டி எரிமலைபோலச் சீறுகிறாள் ; சாபம் வைக்கிறாள்.

வேணு :—காதற்கனியே, கவலை வேண்டாம் ; இதெல்லாம் காலவெள்ளத்தில் கரைந்து போகும். இவர்கள் சாபமெல்லாம் நமது ஆசீர்வாதம்.

கம :—ஆத்மத்யானம் அரை நாஸ்திகமாம். பூஜைப் பெட்டியிலிருக்கும் பெருமாளே தெய்வமாம் ! சாதி சமய ஆசாரந்தான் மோக்ஷத்திற்கு முடிவான வழியாம்.

வேணு :—கண்ணே, அனைவருள்ளும் பரமாத்மா ஒன்று. அவரவர் மனோபாவனைப்படி அவனுக்குப் பெயர் வடிவைக் கற்பிக்கின்றனர். சுத்த மனமே அவன்

விளங்கும் கண்ணாடி. பரிசுத்தமான வாழ்வு, மாசற்ற உள்ளம், ஆசையாணவக் கட்டற்ற சுதந்திரம், தன்னைப் போலவே அனைவரையும் காணும் ஸர்வாத்ம ஸமத்வம்—இவையே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தின் வழி. இதற்கு ஸாதனம் தினம் மௌனமாக ஒரு மணி நேரம் மனங்குவிந்து சித்தத் திரைகளை விலக்கித் தியானித்தல்; பரோபகாரத்தால் தன்னல அகங்காரத்தைப் போக்கல். இந்தத் தியானத்தால் நாளடைவில் ஆன்மா உணர்வாகும். பிறகு, சாதி மத பேதங்கள் தாமே நீங்கி எங்கும் தன்னையே காணலாம்.

கம:—ஆம், நன்றாக விளங்குகிறது. மனிதன் தன்னை ஆத்மாலயமாக அறிந்து, சுற்றிலுமுள்ள உயிர்களையும் நடமாடுங் கோயில்களாக மதித்தால், பிறகு பேத புத்தி யேது? இதெல்லாம் சொன்னால், 'பெண், லக்ஷணமா யிரு; வேதாந்தம் பேசாதே' என்று மிரட்டி யடக்குகிறார்கள்.

வேணு:—அதைப்பற்றிக் கவலையில்லை; புது வெள்ளத்தைப் பழங் குட்டிச் சுவரு தடுக்க முடியுமா? ஆணும் பெண்ணும் ஆத்மசுத்தியுடன் ஆத்ம சுதந்திரத்தில், ஆத்ம ஸமத்வத்தில் வாழவேண்டும். அதுவே நமது கொள்கை.

கம:—நாதா, இங்குப் பெண்கள் படும்பாடு சொல்லி முடியாது. நாமெல்லாம் கலி தூதராம். பெண்ணுக்கு இடங்கொடுத்தால் உலகம் கெட்டுப் போகுமாம்.

வேணு:—பெண்களுக்கு முதல் இடந் தருவதே எனது கொள்கை. கண்ணே, காய் முற்றினால் கனி; கலி முற்றினால் கிருத யுகம் வரும். இரவு முற்றினால்

பகல். ஆணும் பெண்ணும் ஒரு ஆன்மாவின் இரண்டு தோற்றமே; அர்த்த நாரீச பாவனையே. சுடரும் கதிரும், தண்ணுந் தரையும் போல இரண்டும் கலந்தே உலகம். இக்கலப்பின் சக்தியே காதல். இயல்பான காதலால் ஒருவரையொருவர் உயிரிற்கலந்து வாழ்வதே வாழ்வு. இதற்கேற்றபடி தான் நமது முன்னேற்றக் கொள்கைகள் வகுக்கப்பட்டுள்ளன. நாம் இதை நடத்திக் காட்டுவோம்.

கம :—அதற்கே என்னுயிரைத் தங்களுக்கு அர்ப்பணிக்கிறேன்.

வேணு :—கண்ணே, நாமிருவரும் எப்போதும் ஒன்று.

கம :—தெய்வம் துணை செய்க; தடைகள் ஒழிக. நாதா, குணக்கொழுந்தைக் கண்டால் பகீரென்கிறது; ஆஸ்தியெல்லாம் அவனுக்கு எழுதி வைத்து விட்டார் அப்பா. புதன் கிழமை முகூர்த்தத்திற்குப் பலமான தயாரிப்புகள் நடக்கின்றன.

வேணு :—கண்ணே, உன் தந்தையின் செல்வம் அவசியமில்லை; நீயே எனது நவநிதி; எனக்கு ஏராளமான செல்வம் உள்ளது. அத்தனையும் முன்னேற்றச் சங்கத்திற்கே தந்து, பொது நலத்திற்கே வாழ்வேன். குணக்கொழுந்தின் அயோக்கியத்தனம் நாளையே சந்தி சிரிக்க வெளியாகும்; பார்.

கம :—காதல, அவன் என்னைப் பணத்திற்காகவே மணக்கிறான்; பங்கஜத்தையே காதலிக்கிறான்; வற்புறுத்துகிறான்.

வேணு :—தெரியும். அவன் எண்ணம் மண்ணாகும். நாளையே காண்பாய். கண்ணே, ஏற்பாட்டின்படி திங்க

என்று அந்திநேரம்...தெரிந்ததா, உடையெல்லாம் பங்கஜம் கொண்டு வருவாள்.........பயப்படாதே.

கம :—அச்சமில்லை, அச்சமில்லை, பயமில்லை! காதல, காட்டிய வழியில் வீரவுறுதியுடன் நடக்கிறேன்.

(பின்னால் மோட்டார் ஊதுகிறது)

வேணு :—சரி, இனி நாம் செல்வோம்; நாளை இதேயிடத்தில் சந்திப்போம்.

(செல்லல்)

———

## காட்சி 18

[கோமதியின் வீடு; கோமதியின் மாற்றம்; குணக்கொழுந்தின் பெட்டிச்சாவியை அரக்கில் பதித்து மற்றொரு சாவி தயாரிக்கத் தந்திரம் செய்கிறாள்]

கோமதி :—விலைவாழ்வு வாழ்வா! நாய்ப்பிழைப்பு இதை விட நல்லது! மகிளாமந்திரத்தில் அந்த மஹாபுருஷன் சொன்ன பொன் மொழிகள் என்னைப்புதிய பெண்ணாக்கின. எத்தனையோ தேவதாசிகளைத் திருத்திய மஹான் என்னையும் திருத்தி நல்ல வழி காட்டுவார். விபசாரத்தை இன்றோடு ஒழிக்கிறேன்; விபசார விடுதியை ஒழிக்கவே என் வாழ்வை நிவேதிக்கிறேன். இது என்ன பயங்கரமான மஹா பாதக நரகம்! தர்ம பத்தினியின் வயிறெரிய எத்தனை ஆடவர் இந்த மாய வலையில் விழுகின்றனர்! கட்டிய தாலியில் தீவைத்துக் கொணர்ந்தும் மோகத்தீயை வளர்க்கின்றனர்! எத்தனைக் குடும்பங்கள் அதோகதியாகின்றன! எத்தனைக் குலப்பெண்கள் கண்ணீர் விடு

கின்றனர்! எத்தனைச் செல்வர் ஒட்டாண்டியாகின்றனர். எத்தனை வாலிபர்கள் இந்த விபசாரத்தால் பயங்கரமான நோய்களைச் சம்பாதித்து ஜீவனற்றுத் தோலும் எலும்புமாகி எமன் வாயில் விழுந்தனர்! மோசம்! வஞ்சம்! குடி! களவு! சூது! நரகம், நரகம், நரகம்!......
இதுவே வேசை விடுதி. சீ, சீ, சீ, இந்த வாழ்வு வேண்டேன், வேண்டேன். இன்றோடு ஒழிக்கின்றேன். என் செல்வமெல்லாம் மகிளா மந்திரத்திற்குத் தந்து துறவு பூண்டு, அதன் பணி புரிகின்றேன்! இன்று ஒருகாரியம் உள்ளது. அது முடியு மட்டும் சாகசம்; பிறகு துறவு!

(குணக்கொழுந்து வருதல்)

(மனத்துள்)

இந்த ஐயன் மஹாபாதகன், வஞ்சகன், மோசக்காரன் என்று தெரிகிறது. இவன் குட்டை வெளிப்படுத்தி இவனால் அந்தக்குடும்பம் மோசம் போகாது காப்பதே இன்று வேலை.

குணக் :—என் கண்ணே, காதற் கனியே, கட்டிமாம்பழமே.

கோமதி :—ஐயருக்கு கலியாணமாமே, புதன்கிழமை?

குணக் :—பணம் வருகிறது! எல்லாம் உனக்குத்தானே! கையாலே தாலிகட்டி மனத்தாலே உன்னைக்கட்டி...

(கட்ட வருகிறான்)

கோமதி :—இப்படி உட்காரும். ஐயருக்கு அதிட்டம். பணம் வருகிறது.

குணக் :—எனக்குப் பணம் வந்தால் உனக்குத்தானே வேட்டை! கண்ணே, என் காதற் கனியே.

கோமதி :—தாரம் வந்தால் தாசியைத் தேடுவார்களா?

குணக் :—அடி ரதியே, என் மதம் நேர் எதிரிடை என்று தெரியாதா? தாசி வந்தால் தாரத்தைத் தேடமாட்டேன்.

கோமதி :—பின்னே அநியாயமாக ஒரு பெண்ணை ஏன் கெடுக்கிறீர்கள்?

குணக் :—பணமடீ, பணம்—மூன்று லகாரம்! பெரிய மாளிகை!

கோமதி :—அதில் சுகமாகக் கமலம்மாளுடன் வாழுங்கள். என்னை விட்டிடுங்கள்.

குணக் :—உன் பாதமே என் பொற்கமலம். அதன் இதழே என் உள்ளம்.

கோமதி :—இப்படித்தான் இங்குச் சொல்லுவீங்க; பணமவுசிலே என்னை மறப்பீங்க.

குணக் :—பகதூரை அப்படியா நினைத்தாய்? தாரத்தை மறந்தாலும் தாசியை மறக்கமாட்டேன். வீட்டை மறந்தாலும் வேசி விடுதியை மறக்கமாட்டேன். பிராணனை விட்டாலும் பணத்தை விடமாட்டேன். உலகைத் துறந்தாலும் உன்னை விடமாட்டேன்—சத்தியம், கையிலடித்துத் தருகிறேன்.

கோமதி :—என்மேல் அவ்வளவு பிரியமா? ஆனால் இந்தாருங்கள். இரண்டு புட்டி காதல் ரசம் ஊட்டுகிறேன்.

குணக் :—உன் கையால் உண்டது அமுதம்; என் கண்ணாட்டி, கண்ணாட்டி.

(கோமதி விஸ்கி தருகிறாள்; பலமாகக் குடிக்கிறான்)

அடி என் கண்...ணா...ற்...றி...கற்...றி...முத்...தே நீயே மோட்சம்......யாராயினும் இல்லேன்னா......

கொ...ன்...று போடுவேன்! ஹய்...பகதூர்!...புதன் கலியாணம்—வியாழன்—ரோல்ஸ்ராய் ஒன்று வாங்கி, ரெண்டு...பேர்ர்ரும்...ஜோர்ர்ராக! ஊர் சுத்துவோம் ...உனக்குப் பங்களா கட்டுகிறேனடி! என்...தங்கமே, சிங்கம் இருக்கின்றேன்...அந்தக் கமலம் உன் பணிப் பெண், நீ என் ராசாத்தி, ரதியே! யார்ர் ராவது மீறிப் பேசினால் கொன்ன்ற்று போடுவேன்! பஹ தூர்! சிங்கம்!......ரதியே... (மயங்குகிறான்)

கோமதி :—என்ன மோசம்! பாவம் அந்தப் பெண்ணைக் காப்போம். இவர் வண்ட வாளங்களெல்லாம் இங்கே பெட்டியில் வைத்துப் பூட்டியிருக்கிறார். இதோ சாவி தயாரிக்கிறேன்! (குணக்கொழுந்தின் மடியிலுள்ள சாவியை எடுத்து அரக்கில் பதிக்கிறாள்). காரியம் ஆயிற்று. இராத் திரியே நடராஜப்பத்தரிடம் கொடுத்துப் பதில் சாவி தயாரிக்கிறேன். (போகிறாள்)

குணக் :—ரர ரரர! ரதியே! (மயக்கம்)

---

## காட்சி 19

[மங்களவாத்தியம் முழங்குகிறது. உச்சியில் மாவிலை கட்டி முகூர்த் தக்கால் நட்டிருக்கிறது. செல்லம் மௌனமாகக் குப் பண்ணு பக்கம் நிற்கிறாள். சேஷி தெய்வங்களை வேண்டு கிறாள். குணக்கொழுந்து நமஸ்காரம் செய்கிறான். சீமான் புன்னகைக்கிறான்.]

குப் :—எம்பெருமானே, நடப்பதெல்லாம் உன் லீலை... ராம, ராம! (ஜபமாலை உருட்டல்)

குணக் :—எம்பெருமான் லீலை தேவாள் மூலந்தான் நடக்கிறது. அந்த லீலைக்குப் பாத்திரம் தாஸனும், சேஷி நாச்சியாரும். ... ...

சேஷி :—திருப்பதிப் பெருமாளே, ஸ்ரீ ரங்கநாதரே, அப்பக்குடத்தானே, காஞ்சி வரதப்பா, கும்பகோணம் சக்ரபாணியே, சிதம்பரம் கோவிந்தராஜப் பெருமாளே, நூத்தியெட்டுத் திருப்பதிகளிலும் எழியிருக்கும் பெருமாளே, என் பேத்தி கமலம் பெத்துப் பெருகிப் பெரு வாழ்வு வாழவேண்டும்! சுபமாக முகூர்த்தக் கால் நட்டானது, ஒரு பெரிய காரியம். தும்பிக்கையாழ்வானே, நிர்விக்னமாக நாலுநாள் திருமண வைபவமும் நடந்து, திருப்பதிக்குப்போய் அலுமேலு மங்காள் உபயநாச்சியார் சமேதராக வேங்கடேசப் பெருமானுக்குத் திருக்கல்யாணம் நடத்திவைக்க வேணும். திருவருள் செய்.

குணக் :—தாயாருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்.

(நமஸ்கரிக்கிறான்)

சேஷி :—அப்பா, வாழையடி வாழையாகப் பெத்துப் பெருகி வாழு! தீர்க்காயுசு.

குணக் :—தேவாளுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்.

குப் :—தீர்க்காயுஷ்மான்பவ!

குணக் :—செல்லம், வந்தனம்......(செல்லம் சும்மா இருத்தல்)

சீமான் :—Good evening.

குப் :—கமலம், கமலம், வந்து நமஸ்காரம் பண்ணு.

சேஷி :—அடி குட்டி—வா இங்கே. தூங்கிப் போயிருக்கும். நல்ல சமயத்திலே சொக்கி விழுகிறது இந்தக் குட்டி. போய் இழுத்து வருகிறேன். (போகிறாள்)

குப் :—செல்லம், எல்லாம் திருப்தியா ?

செல் :—நடக்கட்டும். தாங்கள் ராஜா ; மாமி மந்திரி; கொழுந்து ப்ரதானி ; காரியம் நடக்கட்டும்.

(சேஷி வருதல்)

சேஷி:—குட்டியைக் காணுமே! எங்குத் தொலைந்தது! எழவெடுத்த பெண்ணு! அடி செல்லம், எங்காவது அனுப்பினையா ?

செல்:— இல்லையே ! எங்குப் போனுள் கமலம்......?

குப் :—ஹா......காணுமா ! தேடுங்கள் ! ராமா! ராமா! வெண்ணெய் திரளும்போது சட்டி யுடைகிறது !

சீமான் :—சட்டி உடையும்போது வெண்ணெய் திரளுகிறது !

குணக் :—வெளியே போ, அதிகப்ரசங்கி, சுப காரியம் நடக்கும்போது சின்னப் பயல், பேசாதே.

(பரபரப்பு; எல்லோரும் தேடுகிறுர்கள்.

சேஷி :—ஐயையோ ! காணுமே! யார் மாயமோ ! நதியிலே வெள்ளம் !

குப் :— (ஒரு கடிதத்துடன்) கமலி படுக்கையில் இந்தக் கடிதம் இருந்தது.

செல் :—படியுங்கள் !

குப் :—“ அப்பா, என்னைத் தேட வேண்டாம். உலகம் எனக்குப் பிடிக்கவில்லை. என்னைக் கட்டாயப் படுத்தி அந்த அயோக்யனுக்குக் கட்டப் பார்க்கிறீர்கள். அதை விட உயிர் விடுவதே மேல் என்று உறுதிகொண்டு செல்கிறேன். இனி என்னை மறந்துவிடுங்கள்.

சேஷி :—(மாரடித்துக் கொண்டு) 'கமலம், ஐயையோ! போனையா! போனையா! அடி என் தங்கமே! கிளியே! மயிலே! குயிலே! மணியே! போனையா! போனையா! கட்டையிலே போகிற முட்டையிலே போகிற காலனே!

சீமான் :—பாட்டீ, உன் மார்பென்ன டமாரமா?

சேஷி :—எடு, கட்டையிலே போகிறவனே. உங்களாலே தான் என் பேத்தி மோசம் போனுள்.

(பிலாக்கணம் பாடுகிறுள்)

அடி உன்னே,
கண்ணுளம் பண்ணிக் கண்குளிரப் பார்க்கலியே!
பூலாச்செண் டாடிப் பொங்கி மகிழலியே!
ஊஞ்சலிலே யாடி உள்ளங் குளிரலியே!
சாந்தி கழித்துச் சந்தோஷங் காணலியே!
பேரன் பிறந்து பெருமையாய்க் காணலியே
ஐயையோ போனையா போனையா!

குப் :—என்ன செய்யலாம்! எம்பெருமான் திருலீலே அப்படி. அவன் இச்சை. உம் நடக்கட்டும் ராம...ராம ......செல்லம்.

சேல் :—போலீசுக்குச் சொல்லித் துப்பு விசாரிப்போம்.

குணக் :—நம்ம வீட்டிலே போலீசு வரலாமோ? அப்பா நான் ஆருடம் பார்த்துச் சொல்லுகிறேன். பெருமாள் சந்நிதியிலே பூ வைத்துப் பார்ப்போம். கோணங்கிக் கருப்பையாவிடம் குறி கேட்போம். மணவாள ஜோசியரிடம் குட்டி ஜாதகத்தை இன்னெரு தரம் பார்க்கச் சொல்லுவோம். இதன் மத்தியிலே ஊரிலே தேடுவோம்!

குப் :—அதுதான் சரி.

சேல் :—நான் போலீசுக்கு டெலிபோன் தருகிறேன்.
(போகிறுள்)

குப் :—அதுவும் சரிதான். பெருமாள் சந்நிதியிலே முறையிடுவோம். அவனிச்சை நடக்கட்டும்.

சேஷி :—மிதப்பாயிருக்காதேடா குப்பண்ணு! ஐயையோ! ஐயையோ!

குணக் :—ஆ! அப்பா, சொல்லுகிறேன் கேள்; பெண் எங்கேயோ இருக்கிறுள். தேடினுல் கட்டாயம் அகப்படுவாள். புதன் 5-மணி, சிம்ம லக்னத்திலே வந்து சேருவாள் பார்.

குப் :—அப்படியா? நீ சொன்னுல் பலிக்கும்; அம்மா, பயமில்லை......வா! (எல்லாரும் போதல்)

---

## காட்சி 20

[பங்கஜம் தனியறை; கோமதி குணக்கொழுந்தின் இரகசியங்களைச் சொல்லுகிறுள்; கோமதி சென்றதும், குணக்கொழுந்து வருகின்றுன்.]

பங்கஜம் :—கோமதி, நல்ல காரியம் செய்தாய்!

கோமதி :—அம்மா, இவ்வளவு ஜகஜல்லியை நான் கண்டதேயில்லை. இவர் கும்பகோணம், ராமசாமி ஐயர். அபாயமான மனிதன். இங்கு வந்து இப்படி ஐயங்கார் வேஷம் போட்டுக் குப்பண்ணுச்சாரியார் குடும்பத்தைக் கெடுக்கிறுன். பகலிலே பக்தன். இரவிலே தாசிப்பித்தன்; என்வீட்டில் பழிபோடுகிறுன். குப்பண்ணு வீட்டைப்

பொட்டலாக்கிப் பாதி ஆஸ்தி என்னிடம் தந்திருக்கிறான். இன்னும் பல குடிகளைக் கெடுத்திருக்கிறான். அம்மா, இந்தப்பெட்டியில் அவன் வண்டவாளமெல்லாம் பாருங்கள்.........

பங்க :—கோமதி, வந்தனம்.

கோமதி :—அடியாள் தங்களுக்கு வந்தனம் செலுத்தவேண்டும். விபசாரச் சாக்கடையினின்று என்னை விலக்கி, நல்லோர் கூட்டத்திற்கு ஆளாக்கினீர்கள். அம்மா, குணக்கொழுந்து எனக்குத் தந்த சொத்து முழுதும் கமலம்மாளுக்கு. மற்றப்படி என் சொந்த ஆஸ்தியெல்லாம் மகிளாமந்திரத்திற்கு. இங்குத் தொண்டு செய்யும் இன்பமே என் செல்வம்.

பங்க :—திருந்திய வாழ்வு மருந்தினும் இனிது; அவன் வருகிறான்.

கோமதி :—நான் போகிறேன் (போகிறாள்)

(குணக்கொழுந்து வருதல்)

குணக் :—பங்கஜம், உனது மாணவி அநியாயமாக ஓடிப்போனாள். எங்குத் தேடியும் காணோம்.

பங்க :—நீ ஆரூடம் சொல்வாயே!

குணக் :—அஞ்சன மை வைத்துப் பார்த்ததிலே ஹனுமார் வந்து கடலோரத்திலே நின்றார். கடலிலேதான் விழுந்திருக்கிறாள் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. எப்படியும் பெண் திரும்பிவராது; நமக்கு நல்லது தானே.

பங்க :—கமலி போனால் உனக்குத் திருப்தியா?

குணக் :—எனக்கு வேண்டியது நீயன்றோ. என் கண்ணே, இனி நாம்...

பங்க :—குணக்கொழுந்து, என்னை நீ உண்மையாகக் காதலிக்கிருயா ?

குணக் :—சத்தியமாக; எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். உன்மேல் தான் எனக்கு மயக்கம் அதிகம்.

பங்க :—உண்மைதானு ?

குணக் :—என் கண்ணுணை சொல்லுகிறேன்.

பங்க :—ஆனுல் நான் ஒன்று சொல்லுகிறேன்.

குணக் :—சொல்லடீ கண்ணே.

பங்க :—செவ்வாய்க்கிழமை இரவு 10 மணிக்குத் தனியாக...

குணக் :—கோபாலன் வரமாட்டானே?

பங்க:—தனியாகத்தான், மற்றதை அப்போது பேசிக்கொள்வோம். இப்போது ஒரு காரியமிருக்கிறது; நீ போ...

குணக் :—கண்ணே, ஒரு முத்தம்!

பங்க :—செவ்வாய் இரவு 10 மணிக்குச் சர்வாங்க முத்தம் கிடைக்கும், போய்வா. (இருவரும் பிரிதல்)

---

## காட்சி 21

[குப்பண்ணு—செல்லம்—சீமான்]

குப் :—

வாடினேன் வாடி. வருந்தினேன் மனத்தால்
பெருந்துய ரிடும்பையில் பிறந்து;
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு,
அவர் தரும் கலவியே கருதி;

ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து,
நாடினேன் நாடி, நான்கண்டு கொண்டேன்
நாராயணு வென்னும் நாமம் !

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம். நாரா யண! நாராயண ! உம், எல்லாம் உன் லீலை, நடக்கட்டும். நான் என்ன செய்யட்டும் ? குறிகோணங்கி ஜோசி யம், ஆரூடம் எல்லாம் பார்த்தேன். குழந்தை அகப்பட வில்லை. உனது திருவருளிருந்தால் வரட்டும்; அவ ளிச்சைப்படி விவாகம் பண்ணிக்கொண்டு க்ஷேமமாய் யிருக்கட்டும். (செல்லம் வருதல்)

சேல் :—அத்தான் போலீஸ் இன்ஸ்பெக்டர் சிவசங்கரம் பத்துக் கான்ஸ்டேபில்களுடன் வருகிறுர். நேற்றெல் லாம் அவர்களுக்கு ஏராளமான அலைச்சல்.

குப் :—செல்லம், அல்லும் பகலும் எம்பெருமான் திரு வடியே பற்றி நிற்கும் எனக்கு இப்படிப்பட்ட இடர் கள் வருவானேன் ?

சேல் :—சொல்வி யென்ன ? கொள்ளை போனபிறகு கொல் லைக் கதவைப் பூட்டாத நினைப்பு வந்ததாம் ! சொல் வித்தான் கேட்கப் போகிறீர்களா ? (சீமான் வருதல்)

சீமான் :—கேட்டாலும் சரி, கேட்காவிட்டாலும் சரி; நான் சொல்லுகிறேன். அப்பா, இந்த ஜகஜல்வி, ஆஷாட பூதி குணக்கொழுந்தால்தான் கமலம் ஓடிப்போனுள். பழம் பாட்டியின் நச்சுப் பல்லவி, உனது வைதீகப் பிடிவாதம், வைகுண்ட சாதனம், குணக்கொழுந்தின் கொடுங்கோல்—இவற்ருல்தான் வீடு நாசமானது !

எங்கே காதலோ அங்கே கலியாணம். எங்கே மனமோ அங்கே மணம். கமலிக்குத் தக்க கணவன் வேணு தான். இதை ஊரெல்லாம் சொல்லும். ஆஷாடபூதி அவளை விரும்பவில்லை. பரம அயோக்கியனான இந்த ஆஷாடபூதியைக் கொண்டாடுகிறாய். அன்னத்தை வளர்த்துக் கழுதைக்குத் தருவதா?

குப் :—ஹரி ஹரி! பக்தனை அப்படிச் சொல்லாதேடா.

சீமான் :—அவன் காமப் பித்தன்!

குப் :—விஷ்ணு நேசனடா!

சீமான் :—வேசை நேசன்!

குப் :—ஹரி தாஸனடா!

சீமான் :—படுமோசன்!

குப் :—செல்லம், இந்தப் பயல் இவ்வாறு துடுக்காகப் பேசுகிறானே!

செல் :—உள்ளதுதான் சொல்லுகிறான்.

குப் :—ருஜுப்படுத்த முடியுமா?

சீமான் :—உனது கொழுந்து, பக்காத் திருடன், வீட்டைக் கொள்ளையடிக்கிறான்; உன் சொத்தை நாஸ்திபண்ணித் தாசிவீட்டில் தருகிறான்; அவன் வேஷக்காரப் பயல் என்று கைக்கு மெய்யாகக் காட்டினால் நம்புவாயா?

குப் :—காட்டு, பார்க்கலாம், நம்புகிறேன்.

சீமான் :—அப்பா, அவனது மோசம் வெளிப்பட்டால், அவனை வீட்டை விட்டுத் துரத்துவாயா?

குப் :—இல்லாவிட்டால்?

சீமான் :—என்னைத் துரத்து.

குப் :—பரலோக யாத்திரைக்கு அவனே ஒரு துணையென்று நம்பினேன்!

சீமான் :—அவனை நம்பினால் எமலோக யாத்திரைதான் கிடைக்கும். உன்னை யமலோகம் அனுப்பி, அவன் இங்கிருந்து மைசூர்ப்பாகும் குலாப்ஜானுமாகத் தீட்டு வான்.

குப் :—எப்படி ருஜுப்படுத்துவாய்?

சீமான் :—அப்பா, முதலில் உனது பெட்டகத்தைத் திறந்து கணக்குப் பார்; சுமார் லக்ஷ ரூபாய் கொள்ளை யடித்திருக்கிறான். நான் நிரூபிக்கிறேன். நகைகளைத் திருடியிருக்கிறான். முதலில் கணக்குப் பார். அன்று வந்த பாகவதருக்கு ரூ. 500 தரச் சொன்னாய். ரூ. 200 கொடுத்து, 300 இடுப்பில் சொருகினான். பாகவதரைக் கேட்டு அறிந்தேன். அப்பா, நமது பணம் போச்சு, பெருமை பேச்சு, மானம் போச்சு, வீட்டில் பிறந்தவர் களுக்கு ஒரு சுகமில்லை; வீதியிலிருந்து வந்தவனுக்கு வேட்டையாயிருக்கிறது. உனது அருமைக் கொழுந்து வின் அழிலீலைகளை நாளைப் பத்து மணிக்கு நிரூபிக் கிறேன்.

குப் :—நிரூபிக்காவிட்டால்?

சீமான் :—முன்னே பிடுங்கிக் கொண்டு போன உலக்கை யால் என்னை அடித்து விரட்டு; நான் ஓடிப் போகிறேன். நிரூபித்தால்........

குப் :—உண்மை யறிகிறேன்.

சீமான் :—உண்மையான அன்பருடன் கூடி உண்மையான வாழ்வை மேற்கொள்ள வேண்டும்.

குப் :—முதலில் கண்ணுக்கு மெய்யாகக் காட்டு. அதற்கிடையே சாதுவைத் தூற்ருதே!

சீமான் :—அப்பா, நாளை இரவு 9 மணிக்கு எங்களுடன் மோட்டாரில் புறப்படத் தயாராயிரு.

குப் :—செல்லம், உன் யோசனையென்ன ?

செல் :—சீமான் பொய் சொல்லமாட்டான் ; போவோம்.

(போலீஸ் இன்ஸ்பெக்டர் கதவைத் தட்டுகிருர்)

குப் :—யாரது ?

போலீஸ் :—நான்தான் ஸார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

குப் :—போ...லீ...ஸா...செல்லம்...நீ போய்ப் பாரு.

செல் :—ஆண் பிள்ளைச் சிங்கம் போய்ப்பாருங்களேன்!

குப் :—போலீ...ஸ...டீ! இ! ஏதாயினும் தரவேண்டுமோ ?

செல் :—போலீஸென்ருல் என்ன? புலியா, கரடியா? பொது நல ஊழியர்தானே! நம்மிடம் நியாயமிருந்தால் பயப்படுவானேன் ?

குப் :—மூன்று தலைமுறையாக இந்த வீட்டு மானம் வெளியே போனதில்லை.

செல் :—தங்கள் தாஸனுல் இன்று இப்படி நேர்ந்தது.

போலீஸ் :—ஸார், உடனே கதவைத் திறக்கவேண்டும்.

(செல்லம் போய்க் கதவைத் திறந்து போலீஸ்காரரை அழைத்து வருகிருள்.)

குப் :—ராம, ராம, ராம! எல்லாம் உன் திருலீலை.

செல் :—வாருங்கள், இவர்தான் எங்கள் வீட்டு எஜமான். (கணவனிடம்) இவர்தான் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

குப் :—(எழுந்து உபசரித்தல்) இப்படி எழுணும்! அமிசயித் தாச்சோ! தாகசாந்திக்கு ஏதாயினும் கொண்டுவரச் சொல்லட்டுமா ?

போலீஸ் :—வந்தனம் ; வேண்டாம்.

சேல் :—பிள்ளைவாள், தேடினதில் பலன் உண்டா ?

போலீஸ் :—உள்ளூரில் துப்புத் தெரியவில்லை. தேனூர் ஆற்றோரத்தில் ஒரு உடல் மிதப்பதாகத் தகவல் வந்தது. 154-ஐ அனுப்பியுள்ளேன் ; விபரம் வரும்.

குப் :—ஆ! என்ன துக்கம்! மணக்கோலங்காண விரும்பி னேன் ; பிணக்கோலமோ காண்பேன் !

போலீஸ் :—இன்னும் பார்ப்போம். முதலில் விபரமான ஸ்டேட்மெண்டு எழுதிக் கொடுங்கள்.

குப் :—என்ன எழுதுவது ?

போலீஸ் :—சொல்லுங்கள் : 1937-ம் வருஷம், ஆகஸ்டு மாதம், 16-ம் தேதி, மாலை சுமார் $6\frac{1}{2}$ மணிக்கு—சரி தானா ?

குப் :—சரிதான்.

போலீஸ் :—மகள் பெயர், வயது, நிறம், உயரம்?

குப் :—கே. கமலம்மாள், 16-வயது, செவ்வல்நிறம், சுமார் 5 அடி உயரம், மெல்லிய உடல்... ..

போலீஸ் :—சரி, காரணம்.....

சேல் :—இதோ அவள் கடிதம் உள்ளது. அதில் காரணம் தெரியும்.

போலீஸ் :—சரி, அதை அட்டவிட் ஒண்ணுகத் தாக்கல் செய் கிறேன். யார்மேலாவது சந்தேகம் உண்டா ?

குப் :- அந்த வேணு, கோபாலன் முன்னேற்றச் சங்கம், மகிளா மந்திரத்தின்மேல் சந்தேகம்.

போலீஸ் :—அங்கே தேடியாயிற்று; அகப்படவில்லை.

குப் :—அவ்வளவுதான் தெரிந்தது. எம்பெருமான் திருவிளையாடல் நடக்கட்டும்.

போலீஸ் :—சரி, ஸ்டேட்மெண்டில் கையெழுத்துப் போடுங்கள். (குப்பண்ணு கையெழுத்துப் போட்டுத் தருகிறான்)

குப் :—ஏதோ பாருங்கள். (ஒரு போலீஸ் சேவகன் வருதல்)

போலீஸ் :—154, என்ன ?

போலீஸ் சே :— எஜமான், அது ஆண் பிரேதம். பெண்ணல்ல.

போலீஸ் :—சரி, இன்னும் பார்ப்போம். நான் போய் வருகிறேன்.

குப் :—தயவிருக்கவேண்டும். எப்படியாவது குழந்தையைக் கண்டுபிடித்தால்......

போலீஸ் :—இதுவரையில் பட்ட சிரமத்திற்கே ரூ. 500 தரவேணும்.

குப் :—குழந்தை அகப்பட்டால், 500 கூட்டிக் கொள்ளுங்கள் ! நமோ நம, போய் வாருங்கள்.

போலீஸ் :—குட் பை.

செல் :—வாருங்கள், வழியனுப்புகிறேன், (போகின்றனர்).

குப் :—ராமா ! ராமா ! ராமா !

---

## காட்சி 22

[பங்கஜம் வீடு. ஒரு அறையில் குணக்கொழுந்து, பங்கஜம்.]

குணக் :—பங்கஜம், இன்ருவது உனது மனம் இளகியதே! என்ன உனக்குக் கட்டில் மெத்தையில்லையா? நாளைக்கே ஸ்பிரிங் காட், வெல்வெட் மெத்தைக்கு ஆர்டர் தரவா?

பங்க :—முதலில் மனதை விட்டுப் பேசுவோம்.

குணக்:—கண்ணே, உனக்கொரு மனம் எனக்கொரு மனமா? உன் மனமே என்னுயிர்த்துடிப்பு. கேள்.

பங்க :—என்னையே காதலிக்கிருயா?

குணக் :—உன்னைத்தவிர வேறெவரையும் தலைநிமிர்ந்து பார்க்கமாட்டேன்.

பங்க :—கமலியைக் காதலிக்கிருயா?

குணக்—நீ அன்னம், அவள் ஆந்தை; அவளைக் கண்டால் எனக்குப் பிடிக்காது.

பங்க :—பின்னே அவளை மணப்பதாக ஏன் விரும்பினுய்?

குணக் :—அவளையா விரும்பினேன்; குப்பண்ணு பணத்தையல்லவா விரும்பினேன்? கண்ணே, உன்னைத்தான் விரும்பினேன், விரும்புகிறேன்.

பங்க :—கமலத்திற்கும் உனக்கும் கலியாணம் நடந்ததென்று வைத்துக்கொள்; பிறகு அவள் கதியென்ன?

குணக் :—கொஞ்ச நாள் அவளை வைத்துக்கொண்டிருப்பேன். அதனிடையில் உன்னையே மணம் புரிவேன். பிறகு, வீடு, நிலங்களை ஒத்திவைத்து இரண்டு லகாரம் வந்ததும்......உன்னைக் கூட்டிக் கொண்டு ஹைதராபாதிற்குப் போவேன்.

பங்க :—அங்கே ?

குணக் :—அங்கே பணம் போட்டு ஒரு பெரிய டாக்கி தொடங்குவேன். பணம் சம்பாதிக்கப் பல வழி யுண்டு. நீயும் நானும் ஜோராக வாழலாம். நீ டாக்கி நக்ஷத்திர மாக விளங்கலாம்.

பங்க :—கமலம் ?

குணக் :—காசு வந்தபின் கமலமென்ன ? எக்கேடு கெட்டுப் போகட்டுமே. விரும்பினால், எனது ஸினிமாவில் ஒரு நடிகையாகச் சேர்த்துக்கொள்வேன்.

பங்க :— குப்பண்ணு கதி ?

குணக் :— அதற்கு வேண்டியது பர லோகந்தானே ; அனுப்பி விட்டால்போகிறது.

பங்க :—செல்லம்........?

குணக் :—அவளுக்கு ஏராளமான நகை நட்டு உள்ளது ; பிழைத்துக்கொள்ளட்டும், படித்திருக்கிறாள். உபாத்தி யாயர் வேலை பார்க்கட்டுமே ?

பங்க :—சீமான், குப்பண்ணுப் பிள்ளை ?

குணக் :—அந்தத் துஷ்டப் பூச்சியை நசுக்கி யெறிய வேண்டும்.

பங்க :— குணக்கொழுந்து, குப்பண்ணுவைக் கண்டால் பரம பக்தனாயிருக்கிறாய். துவாதச நாமம் போடுகிறாய். இங்கே ஷோக்குப் பறக்கிறதே...பட்டுச் சட்டை புக்மஸ்வின், முகச் சாயம், ஜவ்வாது பொட்டு......

குணக் :—எப்போதும் பகலிலே பக்தன் ; இரவிலே......?

பங்க :— திருடனா ?

குணக் :—இரவிலே ஷோக்கா யிருப்பேன் ; தமாஷாகக் காலங் கழிப்பேன். என் ஷோக்கில் ஏதாவது குறை யுண்டா ?

பங்க :—அதெல்லாம் மெத்தச் சரி. பகலிலே, குப்பண்ணு முன்னேயும் அப்படி இருந்தாலென்ன ?

குணக் :—கண்ணே, ஆளுக்குத் தக்கபடி நான் இருப்பேன். என் குறிப்புப் பணம். என் வாழ்வே நாடகம்......

பங்க :—என்னிடம் பணமில்லையே !

குணக் :—உன்னிடம் மனத்தையே எதிர் பார்க்கிறேன்.

பங்க :—மனமும் இல்லை.

குணக் :—அப்படிச் சொல்லலாமா ? நீ சத்தியவதியல்லவா? என்னை வரச் சொல்லி ஏமாற்றலாமா ?

பங்க :—நீ என்னை ஏமாற்றினுல் ?

குணக் :—உன் பெயரே எனது தாரகம்; உன்னை ஏமாற்றி ஞல், என்னையே ஏமாற்றியதாகும்.

பங்க :—வைதீகமே, ராம பக்தனே, இப்படிப் பேச லாமோ ? இதெல்லாம் தெய்வத்திற்கு ஒப்புமா ?

குணக் :—நானு வைதீகம் ! இராத்திரி பார்க்க வேண்டும் பஹதூரை ; நீ தான் தெய்வம் !

பங்க :—என்னைத் தவிர வேறொருவரையும் விரும்ப வில்லையா ?

குணக் :—முன்னுமில்லை, பின்னுமில்லை ; நானும் கோபா லனைப்போல பிரமசாரிதான்.

பங்க :—அவரைக் கண்டால் உனக்கேன் பிடிக்கவில்லை ?

குணக் :—அந்தப் பயல் எனக்குப் போட்டியாக வந்தால்?

பங் :—அவரையே நான் விரும்பினுல்?

குணக் :—என்னையும் பார். அவனையும் பார்.

பங் :—உன்னைப்பார்த்தால் பகீரென்கிறது; அவரைப் பார்த்தால் மனங்குளிர இருக்கிறது.

குணக் :—பங்கஜம், என்னை நீ காதலிக்கவில்லையா?

பங் :—நீ வைஷ்ணவனுயிற்றே! எனக்கு ஸ்மார்த்தர் மேல் தான் விருப்பம்.

குணக் .—நான் பக்கா ஸ்மார்த்தனடீ!

பங் :—பின்னே குப்பண்ணு வீட்டிலே நாமம்போட்டுத் தடபுடல் பண்ணுகிருயே!

குணக் :—கண்ணே, என்னை நம்பு. நான் ஸ்மார்த்தன். இங்கே ஒரு காரணத்திற்காக வைஷ்ணவ வேஷம் போட்டேன்.

பங் :—என்ன காரணம்? உன் இயற்கைப் பெயரென்ன? நீ எந்த ஊர்?

குணக் :—கண்மணீ, அதெல்லாம் நாம் ஹைதராபாதிற்குச் சென்றதும் சொல்லுகிறேன். உன் செய்தி யென்ன?

பங் :—இன்னும் ஒரு நிமிஷத்தில் சொல்லுகிறேன்.

குணக் :—பங்கஜம், எனக்கு உடனே இணங்கு.....ஆசைக் காதலி (கையைத் தொடுகிருன்.)

பங் :—(கையை உதறி) எட்ட நில், துஷ்டா.

குணக் :—உன்னைத் தூக்கிக்கொண்டு போவேன். இராவணன் இரத்தம் எனது நரம்புகளில் கொதிக்கிறது! சாகசி, சம்மதி.

பங் :—இல்லாவிட்டால்?

குணக் :—நான் புருஷன், தெரியாதா ?

பங் :—நான் வீரப்பெண், அறியாயோ ?

குணக் :—இதமாகச் சொன்னால் எதிர்பேசுகிருயா ! இதோ பார், உன் காதலே அள்ளி யுண்கிறேன்.

(படாரென்று அடுத்த அறைக் கதவு திறக்கிறது; கோபாலன், வேணு, குப்பண்ணு, சீமான் வருதல்)

கோபா :—இதோ பார், உன்னைத் தள்ளி மிதிக்கிறேன் ! பங்கஜம், நீபோய் செல்லத்துடன் இரு.

(பங்கஜம் போதல்)

குப் :—கலியின் கோலமப்பா ! அட பாதகா ! இன்றுதான் உன்னைக் கண்டுபிடித்தேன். ஏமாந்தேன் ! கண்விழித்தேன் ! ஆஷாடபூதி !

கோபா :—முதலில் இவனைக் கட்டிப்போட்டு மனதார ஆளுக்கொரு அறை வைப்போம். பிறகு பேசுவோம்.

சீமான் :—முதல் அறை என் கையாலே ! என் வீட்டைப் பொட்டலடித்த திருடன் !

குப் :—உன் உடுப்போ, நடையோ, யோக்கிதையோ லட்சணமோ !

கோபா :—(தூணில் கட்டுகிருன்) இரு பயலே !

குணக் :—ஆ! மோசம் போனேன் ; சண்டாளி மோசஞ் செய்தாள் ! பெண்களை நம்பக்கூடாது !

கோபா :—புதிய வேதாந்தம் புறப்படுகிறதோ ! உன்னைப் போல ஆண்களை நம்பலாமாக்கும் ! யார் மோசஞ் செய்தது ?

சீமான் :—வை, பூசை! அச்சா! மாரோ!

வேணு :—நில்லுங்கள் நில்லுங்கள், இதமாகவே போவோம். தள்ளியிருங்கள். (எல்லாரும் சற்று விலகல்) குணக்கொழுந்து, நான் கேட்பதற்குப் பதில் சொன்னால், பிழைத்தாய். நீ தமிழன். தமிழர் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் நாங்கள் உன்னைக் கெடுக்க மாட்டோம்; உன்னைத் திருத்தவே முயல்வோம். நண்ப, யோசித்துப்பார்; உன் செயல்களை யோசித்துப் பார்; ஒரு நிமிஷம் (மௌனம்)

குணக் :—சரி, யோசித்தேன்.

வேணு :—உனக்கு நீ நல்லவன் என்று தோன்றுகிறதோ, கெட்டவன் என்று தோன்றுகிறதோ?

குணக் :—(அழுதுகொண்டே) ஹா! தங்கள் முன்னே நிற்க முடியவில்லையே! தர்மமூர்த்தி, நான் பாதகன்! கொடியவன்!

வேணு :—ஒப்புக்கொண்டாய்; நண்ப, உன் கட்டை அவிழ்க்கிறேன். சொல்; நீ இந்த மகா ராம பக்த சிரோமணியான துப்பண்ணாச்சாரியாரை மோசம் பண்ணினாயா, இல்லையா?

குணக் :—ஆம், முழு மோசம் பண்ணினேன்.

துப் :—என் பெட்டகத்தில் நகை ரூ. 10,000, ரொக்கம் ரூ. 20,000 காணவில்லை. வீட்டுக் கணக்கில் ஏராளமாகப் பொய்க்கணக்கு எழுதியிருக்கிறது.

வேணு :—நண்ப, இந்தப் பணத்தையும் நகைகளையும் நீ அபகரித்தாயா?

குணக் :—ஆம்.

வேணு :—அவையெல்லாம் எங்கே வைத்திருக்கிறாய்?

குணக் :—ஒரு பெட்டியில். பாதி செலவாயிற்று.

வேணு :—என்ன செலவு? கணக்குண்டா?

குணக் :—பலவிதமாகச் செலவழித்தேன்.

வேணு :—நண்ப, உன்மேல் இரக்கப்படுகிறோம். உன்னை அவமானப்படுத்த எண்ணமில்லை. மளமளவென்று உண்மையைச் சொன்னால், உனக்கு நல்லது; மீறினால் இதோ எமது நண்பர் போலீஸ் அதிகாரி யிருக்கிறார்.

குணக் :—ஐயோ! போலீஸ் வேண்டாம். உண்மையே சொல்லுகிறேன். நான் அயோக்யன்.

வேணு :—நீ குடிப்பதுண்டா?

குணக் :—ஆம்.

வேணு :—கள்ளா? சாராயமா? விஸ்கியா?

குணக் :—உயர்ந்த விஸ்கிதான்.

வேணு :—உனக்கு எந்தக் கம்பெனியில் பற்று வரவு.

குணக் :—லிக்கர்ஸன் கம்பெனி.

வேணு :—மாதச் செலவு?

குணக் :—சுமார் ரூ. 200.

வேணு :—பணம்?

குணக் :—குப்பண்ணுவிடம் திருடியதுதான்.

வேணு :—சபாஷ்! உண்மை சொன்னாய்! சந்தோஷம். நண்பா, உனக்குத் தாசி உண்டா?

குணக் :—ஐயோ! அவமானமாயிருக்கிறதே! என்னை விட்டுவிடுங்கள்; ஆற்றில் விழுந்து சாகிறேன்!

வேணு :—அப்பனே, நீ பிழைத்திரு ; யோக்கியமாயிரு ; அதுதான் எங்கள் வேண்டுகோள். சொல், உனக்குத் தாசி உண்டா ?

குணக் :—........(விழிக்கிருன்)

வேணு :—சரி, உண்டு ; பெயர் வேண்டாம்—எத்தனை பேர்? சொல்.

குணக் :—சுமார் ஐந்து.

வேணு :—அத்தனைப் பேருக்கும் பணம் ?

குணக் :—குப்பண்ணு பணந்தான்.

வேணு :—நண்பா, நீ வைஷ்ணவனு, ஸ்மார்த்தனு ?

குணக் :— ஸ்மார்த்தன்.

குப் :—அட பாவி ! என்ன வேஷம் போட்டான் !

வேணு :—உன் இயற்கைப் பெயர் என்ன ?

குணக் :—ராமசாமி ஐயர்.

வேணு :—கும்பகோணந்தானே ?

குணக் :—ஆம்.

வேணு :—வலங்கிமான் கொலேக்கேஸில் சம்பந்தம் உண்டா?

குணக் :—(விழிக்கிருன்.)

வேணு :—சொல்லு ; உண்மை சொல்; உன்னைக் காப்பாற்றுகிறோம்.

குணக் :—அன்பு மயமே, இவ்வளவு தெரிந்த தங்களுக்கு என் கதையை ஒளிப்பானேன். முழுதும் சொல்லி விடுகிறேன்.

வேணு :—அப்படிச் சொல்லு, புத்திசாலி.

குணக் :—தர்ம மூர்த்தி, நான் கும்பகோணம் ரெட்டை ராயர் அக்ரகாரம் மிட்டாதார் வேம்புவையரின் ஏக புத்ரன். பால்யத்தில் நன்ருகப் படித்தேன் ; தமிழ், ஸம்ஸ்க்ருதம், சங்கீதம்...மூன்றிலும் பாண்டித்யம் பெற்றேன் ; சங்கீத மோகத்தால் ஒரு தாசியின் வலையில் விழுந்தேன் ; தகப்பன் வைத்த சொத்தை அழித்தேன் ; கடன் வாங்கினேன் ; வலங்கிமான் மிட்டாதாரிடம் 50 ஆயிரம் கடன் வாங்கினேன் ; கடனுக்காக அவர் என்னை நெருக்கி இமிசை செய்தார். மேலும் அவர் விவசாயிகளைக் கொடுமையாக நடத்தினர். அவருக்கும் நடத்தை என் மாதிரி. நானே விரோதிகளைத் தூண்டி விட்டேன். அவர் கொலையில் எனக்குச் சம்பந்தமில்லை. அதன்பின் கடன் தொல்லை தீரப் புதுச்சேரிக்கு வந்து, எனது தாசி தங்கத்துடன் இருந்தேன். ஒரு நாள் கோமதியின் சதுர் நடந்தது. அவள்மேல் மோகங்கொண்டு இங்கு வந்தேன். அவள் மூலம் இவ்வூர்ப் பணக்காரர்களை யறிந்தேன். குப்பண்ணுச்சாரியார் ராம பக்தர் என்றறிந்தேன். வைஷ்ணவக் கோலங்கொண்டு அவர் வீட்டில் இடம் பெற்றேன். நான் ஆஷாடபூதியே. திருடினேன், கொள்ளை யடித்தேன், குடித்தேன், கற்பழித்தேன் ; என் பத்திரங்கள், கடிதங்கள், சொத்து விவரங்களெல்லாம் கோமதி வீட்டில் ஒரு பெட்டியிலிருக்கின்றன. ஆளனுப்பி எடுத்து வரச் சொல்லுங்கள். பாசாங்கிற்கேனும், மஹா பக்தரான குப்பண்ணுச்சாரியாருடன் கூடி ராம பக்தி செய்ததனுல்தான் இப்போது பரம சுத்தனுன தங்களைத் தரிசித்தேன். என்னை எப்படி

வேண்டுமானாலும் தண்டிக்கலாம். தங்கள் கையால் சுட்டால் சந்தோஷமாக இறப்பேன்.

வேணு :—அன்ப, நீ நல்ல வழிக்கு வருவாய். இதெல்லாம் நீ செய்யவில்லை. உன்னுட்புகுந்த சாத்தான் செய்த வேலைகள். அவனை விரட்டியடிப்போம்; உன்னைக் காப்போம். ராமசாமி, கோமதி எங்களுடன் இருக் கிறாள்; துறவு பூண்டாள்; புதிய பிறப்பெடுத்தாள்; அவள் வீட்டில் நீ வைத்திருந்த பெட்டி எங்களிடம் உள்ளது. அதில் உன் அந்தரங்கமெல்லாம் தெரிந் தன. பெட்டி உனக்கு வேண்டுமா?

குணக் :—அன்பு மயமே, எனக்கினி எதுவும் வேண்டாம். பெட்டியை அப்படியே குப்பண்ணாச்சாரியாரிடம் கொடுக்கவும். பாபச் சுமையால் முக்கால் உயிர் போயிற்று; மீதியை நானே விடுக்க உத்திரவு தாருங் கள். இல்லேல், தங்கள் சங்கத்தில் ஒரு ஊழியனாக என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்.

வேணு :—அன்ப, என் உள்ளம் பூரித்தது. அவ்வாறே எம் முடன் இரு.

குணக் :—பிழைத்தேன்.

கையொன்று செய்ய, விழியொன்று நாடக்
கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப்
புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க
விரும்பு மியான்
செய்கின்ற பூசை யெவ்வாறு கொள்வாய்
வினை தீர்த்தவனே!

பெரியாவாளுக் கெல்லாம் நமஸ்காரம்; பாவியை மன்னிக்க வேண்டும்.

வேணு:—மன்னித்தோம். அன்ப, எழுந்திரு. குப்பண்ணுச் சாரியாரே, தாங்கள் இழந்ததெல்லாம் நாளையே மீளும்.

குப்:—கமலம்?

வேணு:—சீமான் உங்களை யெல்லாம் நாளை முன்னேற்றச் சங்கத்திற்கு அழைத்து வருவான். அப்போது எல்லாம் தெரியும்.

குப்:—தாங்கள் இவ்வளவு பெரியவாள் என்று தெரியாது. அறியாத் தனத்தால் ஒரு மாதிரி நினைத்தேன். எனக்கும் புத்தி வந்தது. அதுவும் அவன் லீலே. இனி என் குடும்பம் முழுதும் தங்கள் சங்கத்திற்கே அர்ப்பணம். கமலி உயிரோடிருந்தால் தாங்களே அவள் கணவன். எங்கள் வீடும் நிலமும் தங்களுக்கும் சீமானுக்குமாக இருக்கட்டும்.

வேணு:—பெரியவாள் மனப்படி நடக்கட்டும்.

எல்லாரும்:—வேணுவுக்கு ஜே!<br>கமலிக்கு ஜே!<br>குப்பண்ணுவுக்கு ஜே!

(எல்லாரும் செல்லல்)

---

## காட்சி 23

[கமலம் ஆணுடையில் இருக்கிருள். வேணு வெற்றி கூறுகிருன்.]

வேணு:—கமலம், ஆணுடையிலும் நீ வீரன்போல் விளங்குகிருய்.

கம:—தங்கள் வெற்றிக்குத் தக்க வீரக்கனலை இறைவன் எனக் கருளுக!

வேணு:—வெற்றி, வெற்றி! கண்ணே, ஆஷாடபூதியின் மோசம்வெளியானது! குப்பண்ணு கண் திறந்தது! உன்னை அவர் பெரிதும் விரும்புகிறார். நமது காதல் வென்றது. நாளை இரவு எட்டு மணிக்கு, நமது சங்கத்தில் இரண்டு பெரிய திருமணங்கள் நடக்கும். நண்பரெல்லாம் உற்சாகமாயிருக்கின்றனர்.

கம:—நாதா, எல்லாம் தங்கள் பெருமையால் நடைபெறுகின்றன.

வேணு:—என்னுயிரே, நாளை நமது காதலின் வெற்றி! 5 மணிக்கே நான் வருவேன். தயாராயிரு.

(இருவரும் முத்தமிட்டுப் பிரிதல்.)

---

## காட்சி 24

[சேஷிப்பாட்டி—குப்பண்ணு]

சேஷி:—பெருமாளே, நீதான் காப்பாற்றினாய். நல்லவேளையாகக் கமலி பிழைத்தாள். திரிசமன் பண்ணினாலும் இந்தக் குட்டிகள் நல்ல திரிசமன் பண்ணினதுகள்! அந்தக் கட்டையிலே போகிறவன் ஸ்மார்த்தனுமே! வைப்பாட்டிக்காரனுமே! கழிச்சலிலேபோக இப்படி வேஷம்போட்டு வீட்டைக் கெடுத்தானே! திருடினதெல்லாம் திருப்பித் தந்து யோக்யனாய்ப் போய் விட்டானும்! அந்த மட்டிலே சரி.

குப் :—அம்மா, என் கண் திறந்தது. வேணு சாமான்யமல்ல ; மஹாபுருஷன். அவன் அன்பு, பக்தி, சிரத்தை, வணக்கம், அடக்கம், அறிவு, பரோபகாரம் எல்லாம் நேரே கண்டேன்.

சேஷி :—நீயும் அவனோடே சேர்ந்தாயா ?

குப் :—ஆம். இனி நாம் வேறு அவன் வேறல்ல. கமலிக்கு நாளை முகூர்த்தம். நாம் போவோம். நாம் கலியாணத்திற்குத் தயாரித்ததெல்லாம் சங்கத்திற்கே.

சேஷி:—அதென்னடா குப்பண்ணு, பொருத்தம் பார்க்க வேண்டாமா, நிச்சிதார்த்தம் வேண்டாமா, ஊரழைக்க வேண்டாமா ? பாலிகை வேண்டாமா ? பந்தல் போட வேண்டாமா ? வைதீகச் சம்பிரதாயம் வேண்டாமா......காசி யாத்திரை வேண்டாமா ? நலங்கு, பூலாச் செண்டு, கண்ணூஞ்சல், சம்பந்தி நலங்கு, நாகவல்லி எல்லாம் வேண்டாமா ? ஆஞ்சநேயர் ஒரேடியா லங்கையிலே குதித்ததுபோலே, எல்லாந்தாண்டி ஒரே நாளிலே கலியாணமா ?

குப் :—மனப்பொருத்தம் உள்ளது ; மனச்சாட்சி ஒப்புகிறது ; தெய்வம் சம்மதிக்கிறது ; ஊரெல்லாம் ஆமோதிக்கிறது. நாளைப் பார் அந்த வைபோகத்தை !

சேஷி:—எப்படியாவது கமலி மணையிலே உட்கார்ந்து பார்த்தால் போதும்.

கௌரி கல்யாணமே
வைபோகமே...

---

## காட்சி 25

[முன்னேற்றச் சங்கப் பிரசங்க மன்றம். அலங்கார மேடையில் வேணுவும் கமலியும் மணக்கோலத்துடன் வீற்றிருத்தல். அடுத்து, பங்கஜமும் கோபாலனும் மணக்கோலத்துடன் வீற்றிருக்கின்றனர். குப்பண்ணு கமலி பக்கம் வீற்றிருக்கிறார். சீமான், வந்தவரை உபசரிக்கத் தயாராயிருக்கிறான். அணியணியாக நாற்காலிகளில் சங்கச் சகோதரர், சகோதரிகள் வீற்றிருக்கின்றனர். வேணுவின் தந்தை ரங்க ராஜா தம்பதிகளை வாழ்த்துகிறார். சேஷி வியப்புடன் ஒரு மூலையில் உட்கார்ந்திருக்கிறாள். கோமதி பாடுகிறாள்.]

### திருப்புகழ்

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம —வெகு கோடி
சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம —கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம —அருள்தாராய்

(எல்லோரும் 5 நிமிஷம் தியானித்தல்; ரங்கராஜா பேச எழுந்திருக்கிறார்; சீமான் மாலை சூட்டுகிறான்; கரகோஷம்)

ராம பக்த சிகாமணியான குப்பண்ணுச் சாரியாரே, எங்கள் முன்னேற்றச் சங்கத்தின் கைபோலுதவும் செல்

லம்மையே, சகோதர சகோதரிகளே, இன்று நாம் புதிய இன்பம் பெற்றோம். இன்று இரண்டு அற்புதமான தம்பதிகளைக் கண்டு, கண்ணும் மனமும் பூரித்தோம். இதுவே நன் மணம்; நறுமணம்; மனம் பொருந்திய திருக்கல்யாணம்; காதலிற் பூத்த கடிமணம். கமலம், வேணு, பங்கஜம், கோபாலன் ஆகிய இத்தம்பதிகள் தமது உடல், பொருள், ஆவியெல்லாம் பொதுநலப் பணிக்கே அர்ப்பணித்தவர்கள். அழகு, கல்வி, குணம், ஒழுக்கம், உயர்ந்த உள்ளம், கற்பு இவையே கமலம். கமலம் தனக்கேற்ற கணவனைக் காதலால் அடைந்தாள்.

எல்லாரும்:—கமலமும் வேணுவும் நீடூழி வாழ்க!

ரங்கராஜா:—வேணுவின் அருமை, பெருமை யாவரும் அறிந்துளர். கல்வி, செல்வம், குணம், கொள்கை, அன்பு, வீரம், ஆற்றல், பொது நலம், நட்பு, ஈகை, தியாகம், சித்த சுத்தம், ஆத்ம ஞானம்......இவையே வேணு. அந்த அற்புத மணாளனைப் பெறும் பாக்கியம் கமலத்திற்கே கிடைத்தது. பரம பக்தரும், பரம சாதுவுமான குப்பண்ணாச் சாரியாரின் ராம ஜபம் வீணாகவில்லை. இந்தத் திருமணம் அதன் பலனே.

எல்லாரும்:—ராம பக்தர் குப்பண்ணாச்சாரியாருக்கு ஜே!

ரங்க:—செல்லம் நமது சங்கத்தின் கைபோல உதவும் வீரப் பெண். சங்கத் தலைவரையே மாப்பிள்ளையாகப் பெற்ற செல்லத்தின் பாக்யம் பெரிதே.

எல்லாரும்:—ஸ்ரீமதி செல்லம்மாளுக்கு ஜே!

ரங்க:—இந்த வெற்றிக்குத் துணையாயிருந்த சீமானை மறக்க முடியாது.

எல்லாரும் :—நண்பர் சீனிவாச ராகவனுக்கு ஜே!

ரங்க :—அடுத்தாற் போல, மற்றொரு முதியோருக்கு ஜயகோஷம் செய்யக் கடமைப் பட்டுள்ளோம். பழமையின் வடிவு; மனத்தில் பட்டதைப் பளிச்சென்று சொல்லும் சுபாவம் யாருக்கு? நமது பாட்டியாருக்குத்தான்!

எல்லாரும் :—சேஷிப் பாட்டிக்கு ஜே! ஜே! ஜே!

(நீண்ட கரகோஷம்)

தமது நீண்ட பழங் கொள்கையுடன் இன்று புது மண வைபவத்திலும் உற்சாகமாகக் கலந்து கொண்ட நமது பாட்டியாருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்.

(கரகோஷம்)

ரங்க :—அடுத்தது பங்கஜம்; மகிளா மந்திரத்தின் உயிர் நாடி. அல்லும் பகலும் பெண்கள் முன்னேற்றத்திற்கு அரும்பாடு படும் இந்த மாதரசியின் மறுமணம் நமக்குப் பேரின்பமளிக்கிறது. பங்கஜமும் அறிவாளி; ஹிந்தி, ஆங்கிலம், தமிழ், சங்கீதம் அனைத்திலும் மேதாவி; அவள் இயல்பாகக் காதலித்து மணந்த கோபாலன் மகா புத்திமான்; பலசாலி; வீரன்; தமிழ் நாட்டில் நமது ராஷ்ட்ரபாஷையான ஹிந்தியைப் பரப்ப அல்லும் பகலும் அரும்பணி புரிந்த தீரன். பங்கஜமும் கோபாலனும் பொது நலத்தின் இரு கரங்களாக வாழ்க!

எல்லாரும் :—போலோ பங்கஜம்...கோபாலன் கி ஜே!

ரங்க :—இந்த வதூவரருக்குப் பல்லாண்டு பாடுவோம்! பெரியவாள் குப்பண்ணுச்சாரியார் ஒரு அடி பாடியதும், திருப்பிப் பாடுவோம்.

குப்பண்ணு :—(மாலை சூட்டல்; கரகோஷம்) (வெகு உருக்கத்துடன்) ஏதுந் தெரியாத மூடபக்தன்; ராம ஜபம் பண்ணிக்கொண்டிருந்தேன். இடையிலே எம்பெருமான் சோதனை ஒரு ஆஷாட பூதியைக் கொண்டு வந்தது. முடிவில் அவனையும் திருத்திய வேணு ஒரு மஹா புருஷன். கமலியைக் காப்பாற்றினவனும் வேணுவே. என் கண்ணைத் திறக்கவே ஸ்ரீமந் நாராயணன் இந்தத் திருவிளையாடலை நடத்தினர். இந்த வதூவரனும் அவனே! இங்குக் கூடியிருக்கும் பக்த கோடிகளும் நாராயணனே. எல்லாருக்கும் சாஷ்டாங்க நமஸ்காரம். மலைபோல வந்த விபத்துப் பனிபோல மறைந்தது. கமலம்-வேணு, பங்கஜம்-கோபாலன் ஆகிய இவ்வதூவரர் பல்லாண்டு வாழ்க.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறுயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு, உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

எந்நாள் எம்பெருமான் உனக்கடியோ
மென்றெழுத்துப் பட்ட
அந்நாளே அடியோங்கள்
அடிக்குடில் வீடு பெற்றுய்ந்தது காண்!
செந்நாள் தோற்றித் திருமதுரையுட்
சிலைகுனித்து, ஐந்தலைய
பைந்நாகத் தலைப் பாய்ந்தவனே
உன்னைப் பல்லாண்டு கூறுதுமே!

எல்லாரும் :—பல்லாண்டு பல்லாண்டு... (மலர் தூவல்)

சேல்லம் :—(மாலே—கரகோஷம்) நண்பர்களே, இடர்கள் விலகின ; இன்பம் எழுந்தது ; உண்மை உயர்ந்தது. பொய் தாழ்ந்தது. காதல் வென்றது ; கட்டுகள் பட்டன. சுப காரியம் அமைதியாக நிறைவேறியது. சிவனும் சக்தியும், திருவும் திருமாலும், சுதிரும் கதிரவனும்போல இந்த அற்புதத் தம்பதிகள் நீடூழி வாழ்க!

(வேணுவும் கமலமும் பெரியோருக்கு நமஸ்கரித்தல். எல்லாரும் தீர்க்காயுஷ்மான் பவ என்கின்றனர்.)

வேணு, கமலம் :—(சேஷிப்பாட்டிக்கு) பாட்டி, நமஸ்காரம்.

சேஷி :—கண்ணாளம் பண்ணிக் கொண்டாயா! என்னேப் பாரடீ! கமலம், ஓசைப்படாது ஆம்படையானேச் சம்பாதித்துக் கொண்டாயே ; கெட்டிக்காரி. பெத்துப் பெருகிப் பெருவாழ்வு வாழு! அப்பா, வேணு, உன்னே என்னமோ என்று நினேத்தேன். இவ்வளவு பெரியவன் என்று தெரியாது. இந்தக் காலத்துப் பிள்ளேயாண்டாங்கள் 3000ம் கொண்டா, 5000 கொண்டா என்கிருர்கள். ஒரு செலவில்லாமே, மோதிரம் மாத்திக் கொண்டு காரியம் ஆச்சுதென்று கைதட்டி, மங்களம் பாடிவிட்டீர்களே. அப்பா, தீர்க்காயுசாயிரு. கமலியை நன்ருக வைத்துக்கொள். அலமேலுமங்கை சமேதரான திருப்பதி வெங்கடேசப் பெருமாளே, தம்பதிகளே க்ஷேமமாகக் காப்பாற்று.

வேணு :—நண்பர்களே, இந்த வைபவத்தை இனிது நிறைவேற்றிய உங்களுக்கெல்லாம் நமஸ்காரம். இறைவ

னருளால் இடர்கள் நீங்கி இன்பம் ஓங்கியது. ஸ்ரீமான் ஆசாரியாளைப்போன்ற பரம வைதீகர்களும் நம்முடன் சேர்ந்து பணி புரிய முன்வந்தது நமக்குப் புதிய சக்தி தருகிறது. புதுமை பொலிக! புது யுகம் மலர்க! இருள் ஒழிக! அருளொளி விளங்குக! அதர்மம் அழிக! தர்மம் வெல்க! பொய்யொழிக! சத்தியம் வாழ்க! ஓம் சுத்த சக்தி!!

எல்லோரும் :—

(தேவாரம்)

தலையே நீ வணங்காய்—தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீ வணங்காய்!
நெஞ்சே நீ நினையாய்—நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீ நினையாய்!

———

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | — | திருத்தம் |
|---|---|---|---|---|
| 7 | 15 | ஆண் ; | — | ஆண் |
| 23 | 18 | பீக் | — | டீக் |
| 29 | 18 | (வேணு...ருன்) | — | இது சீமான் பேசுவது |
| 36 | 24 | ஏளட்டும் | — | ஏழட்டும் |
| 37 | 10 | ஏளட்டும் | — | ஏழட்டும் |
| 39 | 24 | ரங்நாதன் | — | ரங்கநாதன் |
| 41 | 1 | ஒட்டாது. | — | ஒட்டாது |
| 73 | 18 | நாளாயிற்று | — | நாளுயிற்று. |

சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றிய

## அன்பு நிலைய நூல்கள்

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | பைந்தமிழ்ச்சோலை | 0 | 4 | 0 |
| 2. | இராமலிங்க விஜயம் | 0 | 10 | 0 |
| 3. | இன்பமாலை | 0 | 5 | 0 |
| 4. | உடலுறுதி | 0 | 12 | 0 |
| 5. | தர்மஸாதனம் (மூலம்) | 0 | 3 | 0 |
| 6. | பொதுநெறி (மூலம்) | 0 | 1 | 0 |
| 7. | திருக்குறள் இன்பம் (சாப்பர் எடிஷன்) | 1 | 4 | 0 |
| | ஷை (கலிகா எடிஷன்) | 2 | 0 | 0 |
| 8. | இன்று மனிதனும் இனிவரும் மனிதனும் | 0 | 2 | 0 |
| 9. | தியானமாலை | (அச்சில்) | | |
| 10. | திருநூல் (தூய வாழ்வு) | 1 | 0 | 0 |
| 11. | பாமலர் | (அச்சில்) | | |
| 12. | அப்பரின் அன்பு வெற்றி | 0 | 10 | 0 |
| 13. | புதுமையும் பழமையும் | 0 | 8 | 0 |
| 14. | வரகவி தாகூர் | 0 | 3 | 0 |

கிடைக்குமிடங்கள் :—

1. **Manager, Anbu Nilayam,**
   Ramachandrapuram, Trichy Dt.
2. **The South India Saiva Siddhanta Works Publishing Society Ltd.,**
   Coral Merchant St., Madras,
3. **E. M. Gopalakrishna Kone.**
   Publisher, Pudumandapam, Madura.
4. **Bharathi Prasuralayam,**
   Triplicane, Madras.